# செந்தமிழ்ச் செல்வி



உள்ளுறை




சிலம்பு-௫௫] வள்ளுவர் ஆண்டு-௨0௧௧, புரட்டாசி Oct, '80 [பரல்-௨

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்

க. மொழிப் பேரறிஞர் ஞா. தேவநேயப் பாவாணர், எம்.ஏ.
இயக்குநர், தமிழ்நாட்டரசுச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டம், சென்னை 8

உ. செஞ்சொற்கொண்டல், வித்துவான்,
முனைவர் சொ சிங்காரவேலன், எம்.ஏ.,டிப் லிங்., பி.எச்.டி., மாயூரம்.

ங. முனைவர் ச. வே. சுப்பிரமணியம், எம்.ஏ., பி எச்.டி.
இயக்குநர், உலகத்தமிழ் ஆராய்ச்சி மன்றம், சென்னை.

ச. பேராசிரியா கு சுந்தரமூர்த்தி. எம். ஏ.
முதல்வர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

ரு. புலவர் இரா. இளங்குமரன், தலைமைத் தமிழாசிரியர்,
மு. மு. உயர்நிலைப்பள்ளி, திருநகர், மதுரை-6.

சிறப்பாசிரியர்: தாமரைச்செல்வர் வ. சுப்பையா.

---

## "செந்தமிழ்ச் செல்வி"

### விளம்பரக் கட்டணம்

### (ADVERTISEMENT TARIFF)

| | |
|---|---|
| மேலட்டை 4ஆம் பக்கம்-முழுப் பக்கம் (Back Wrapper 4th Page) | ரூ. 100/- |
| மேலட்டை 3ஆம் பக்கம்-முழுப் பக்கம் (Wrapper 3rd Page) | ரூ. 80/- |
| முழுப் பக்கம் (உள்ளே) (Full Page-Inside) | ரூ. 60/- |
| அரைப் பக்கம் (உள்ளே) (Half Page-Inside) | ரூ. 40/- |

## "செந்தமிழ்ச் செல்வி"

### ஆண்டுக் கையொப்பம்

(Subscription Rates)

உள்நாடு ரூ. 12 00 வெளிநாடு ரூ. 20 00

### ஆயுள் கையொப்பம்

உள்நாடு ரூ. 120 00 வெளிநாடு ரூ. 200 . 00

செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ருரு | திருவள்ளுவர் ஆண்டு உ௰கக, புரட்டாசி அக்டோபர் 1980 | பரல் உ |
|---|---|---|

## அறிஞர்கள் போற்றும் ஆட்சியாளர் அவர்களின் அரும்பணி

இவ்விருபதாம் நூற்றுண்டில் தமிழ் இலக்கிய உலகில் ஓர் ஆக்கமான புரட்சி நடந்து வருகிறது. இஃது அறிவுப் புரட்சி. ஆக்கமான புரட்சி. ஈராயிரமாண்டுகளில் எழுந்த அரிய நூல்கள் அனைத்தும் ஒருசேர அரை நூற்றுண்டுக்காலத்தில் அழகிய முறையில் அச்சேறிய அறிவுப் புரட்சி. அவ் வறிவுப் புரட்சியைச் செய்தது சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம். அதற்கு வித்திட்டவர் திருவாளர் வ. திருவரங்கம் பிள்ளை. அதனை வேரூன்றச் செய்து விழுதுகளுடன் கூடிய பெருமரமாக ஆக்கியவர் அவர்தம் அருமைத் தம்பியார் செந்தமிழ்ச் செல்வர் திரு. வ. சுப்பையா பிள்ளை ஆவார். 22—9—80 அன்றுடன் 84 அகவை யெய்திய அவர்தம் அரும்பணியை அறிஞர் பெருமக்கள் பலர் அழகு தமிழில் விளக்கி வாழ்த்தியுள்ளனர். எட்டாண்டுகட்குமுன் ஐயா அவர்களின் ‘பவள விழா’ வின்போது பாராட்டுரை வழங்கிய அப் பெருமக்கள் அவர் தம் அருந்தொண்டை வியந்து குறிப்பிட்டுள்ளனர் :

தவத்திரு யோகி சுத்தானந்த பாரதி பாராட்டுகிறுர் : ‘சுப்பையா பிள்ளை மூதிளஞ்சிங்கம்; சிவப்பழம், திருநீறு துதைந்த நுதல், ஆயிரம் நூல்களின் சுமையால் வணங்கிய முதுகு; வணங்கிய வாய்; அச்சமற்ற நெஞ்சுரம். செம்மையான செயல்வீறு:— சிக்கனச் செம்மல் - அளவறிந்து பேசும் ஆற்றல் படைத்த சுப்பையா பிள்ளையைக் காண்பதே எனக்குக் களிதுள்ளும் மகிழ்ச்சி’ என்று யோகியார் ஐயாவின் தோற்றத்தை வியந்து கூறுகிறுர்.

ஐயா அவர்கள் இவ்வளவு முதிர்ந்த நிலையிலும் எப்படி இளமைப் பண்புகளுடன் இலங்கமுடிகிறது? டாக்டர் மொ. அ. துரை அரங்களுர் அவற்றின் அடிப்படையை விளக்குகிறுர் : ‘அடக்கம்

நன்றி மறவாமை முதலிய அறப்பண்புகள், மரக்கறி உணவே உண்டல், காபி முதலிய பானங்கள் அருந்தாமை, புகைபிடித்தல், கள் - சாராயம் பருகுதல் முதலிய செய்யாமை, கீழ்த்தரமான படக் காட்சிகள், வானொலிப் பாடல்களில் மனத்தைப் பறிகொடாமை, சீட்டாடுதல், சூதாடுங் கழகங்களில் காலெடுத்து வைக்காமை, குதிரைப் பந்தயங்களுக்குச் செல்லாமை, வீண்பேச்சுப் பேசாமை, உழைப்பையும் கடமையையும் தவமாகவும் வழிபாடாகவும் கொள்ளு தல், சிக்கன வாழ்க்கை முதலியவற்றை விழிப்புடன் பிள்ளை அவர்கள் தம் வாழ்க்கையில் கடைப்பிடித்து வந்துள்ளார். எனவே இவையே அவர் இளமைப் பண்புகள் குன்றுமல் வாழ அடிப்படை களாய் மிளிர்ந்தவை எனலாம். இதைவிட வேறு எவராலும் வேறு எவ்வகையிலும் ஐயா அவர்களின் நேரிய பண்பை எடுத்துக் கூற இயலாது

இத்தகைய அரிய பண்பாளர் கழகம் தொடங்கப்பெற்றது முதலே அதனுடன் இணைந்து தம் வாழ்க்கையை அமைத்துக் கொண்டதனுல்தான கழகத்தை இன்றுள்ள அளவுக்கு உயர்த்த முடிந்தது.

கழகம் தொடங்கப் பெற்ற காலத்தில் இருந்த நிலையைத் தொல்பொருள் அறிஞர் திரு. திருவிக்ரம நாராயணன் கூறுகிருர்:

In those days there was only one kazhagam—The Tirunelveli Saiva Siddhanta Publishing Kazhagam.

ஒரே ஒரு கழகமாக இருந்ததை 'இன்று உலகமே போற்றும் ஓர் ஒப்பற்ற கழகமாக உயர்த்திய பெருமை ஐயா அவர்களையே சாரும் என்கிருர் மலேயாநாட்டு வரலாற்றுக் கழகச் செயலர் திரு. ஜி. ர. டி. சில்வா.

"Padma Shri V. Subbiah Pillai's achivements in 52 years as a publisher for S. I. Saiva Siddhanta W. P. Society with 1450 publications in Tamil and English reminds me of the growth of Oxford University Press which commenced publication in 1478. கழகம் ஆக்ஸ்போர்ட் பல்கலைக்கழக அச்சகம்போல் உயர்ந்து வளர்ந்துள்ளது என்கிருர் அவர்.

கழகம் இந்த அளவிற்கு உயர்ந்ததற்கு—தமிழுக்கு ஒப்பும் இணையும் இல்லாத பணிவிடைகளைச் செய்த—செய்து வருகின்ற திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தோடு உயிரும் உடலும் போன்று கலந்து ஒன்ருகி "ஐயா அவர்கள் உழைத்ததுதான் காரணம்" என்று சோவியத் நாட்டு அறிஞர் காலஞ்சென்ற செம்பியன் கூறிச் சென்ருர்.

ஐயா அவர்களின் வரலாறே கழகத்தின் வரலாறு என்று கூறுகிருர் எடின்பர்க் பல்கலைக்கழகப் பேராசிரியர் டாக்டர் ஆர். இ. ஆஷர். 'His life story is in effect the history of the Saiva

Siddhanta Works Publishing Society, one of the great institutions of Tamil Nadu.'

கழகப்பணியே தம் தலையாய பணி என்று கொண்ட ஐயா கழகக் குறிக்கோளுக்கேற்ற வகையில் நூல்களை வெளியிட்டார்.

ஐயா நூல்களை அக அழகுடனும் புற அழகுடனும் அச்சிட்டு வெளியிட்ட பாங்கை டாக்டர் மு. வரதராசனுர் அவர்கள் விரித்துக் கூறியுள்ளார் : 'ஒவ்வொரு புத்தகத்துக்கும் அக அழகும் உண்டு; புற அழகும் உண்டு. அக அழகு என்பது நூலில் உணர்த்தப் படும் கருத்துக்களின் தூய்மை, உயர்வு என்பனவும், மொழி நடையின் செம்மை, சிறப்பு என்பனவும் ஆகும். புற அழகு என்பது அச்செழுத்துகளின் செம்மையும் தாளின் உயர்வும் புத்தகக் கட்டின் உறுதியும் மேலுறையின் அழகும் ஆகும். இந்த நூற்ருண் டில் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தோன்றியபின் தமிழ்ப் புத்தகங்கள் இந்த இருவகை அழகும் பெற்று வெளிவரலாயின. தொடக்கத்தில் அறிஞர் திருவரங்கம்பிள்ளை ஆற்றிய தொண்டு காரணம் என்பது உண்மை; அதை மேலும் வளர்த்துத் தொடர்ந்து மேன்மேலும் உயர்வுறச் செய்த பெருமை திரு. சுப்பையாபிள்ளை அவர்களைச் சாரும்.

பதிப்புத் துறையில் கழகத்தின் பணியைப் பற்றிப் புகழ்ந்து பேசாத நாவில்லை என்று புகழ்ந்து கூறுகிருர் மதுரை டாக்டர். இராதா தியாகராசன் அம்மையார் : ''செந்தமிழ்க் கல்லூரிகளிலும் கலைக்கல்லூரிகளிலும் தமிழ் இலக்கியம் பயிலும் மாணவ ரிடையே 'சைவசித்தாந்தக் கழகம்'' என்பது புகழுக்குரிய சொல்லாகச் சென்ற ஐம்பதாண்டுகளாகவே நிலவி வருகிறது. 'அழகிய பதிப்பிற்குக் கழகத்தை நாடு' என்பதே தமிழாசிரியன்மார் மாணவர்க்குக் கூறும் அறிவுரை. நமது சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தைப் பற்றிப் புகழ்ந்து பேசாத நாவில்லை ; கேளாத செவியில்லை'' என்று கூறியுள்ளார் அவர்.

நூல்களுக்காக மட்டுமா கழகத்தை நாடுகிறோம்? தமிழ் என்றுலேயே கழகத்தைத்தானே நாடுகிறோம் என்று கூறுபவர் மதுரைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர். வ. சுப. மாணிக்கம் அவர்கள் : 'ஏதாவதொரு தமிழ்நூல், தமிழ்பற்றிய நூல் வேண்டும் என்ருலும், தமிழ்பற்றிய செய்தி வேண்டுமென்ருலும், தமிழ்ப்புலவர் உருவப்படம் வேண்டும் என்ருலும் கழகத்துக்கு எழுதுங்கள் என்ற அளவிற்குக் கழகப்புகழ் தமிழ்நாட்டிலும் அயல்தமிழ் நாட்டிலும், தமிழரிடையேயும், அயல் தமிழரிடையே யும் மண்டிக் கிடக்கிறது. கழகத்தால் தமிழ் வளர்ந்தது ; தமிழால் கழகம் வளர்ந்தது என்ற சதுரப்பாடு நாடறியும்.'

அயல் தமிழரிடை மட்டுமன்றி அயல் நாட்டுத் தமிழரல்லா தாரிடமும் கழகத்தின் புகழ் பரவியிருந்தது என்கிருர் டாக்டர்.

கவில் சுவெலபில் தேவைப்பட்டபோதெல்லாம் தமக்குத் தமிழ் நூல்கள் கிடைத்தன என்று நன்றியுடன் நினைவு கூர்கிறார்:

'When I was a young enthusiastic scholar, I tried to build up Tamil studies in Czechoslovakia. For quite a number of years when it was not only difficult for me to go to India to study Tamil and its enormous cultural heritage in the field but also to obtain the necessary texts. Thiru Subbiah and the S. I. S. S. W. P. Society were most helpful in getting me the necessary books indispensable for serious scholarly work in the field.

'செக் நாட்டிற்கு மட்டுமென்ன? உலகிலுள்ள பல்வேறு அறிஞர்களுக்கும் கழகநூல்கள்தாம் பயன்படுகின்றன' என்று கூறுகிறார் சிந்துவெளி எழுத்துக்களைப்பற்றிய ஆய்வை மேற்கொண்டுள்ள பின்லந்து நாட்டுப் பேராசிரியர் பெண்டி ஆல்டோ: "His efforts aimed at making the great achievements of the Tamil Culture available in the original language as well as in translations acressible for foreigners are of the greatest use for scholars all over the world who are studying the Origin and Development of Indian Civilization."

மொத்தத்தில் ஆங்கிலம் பேசப்பெறுகிற நாடுகளிலெல்லாம் இன்று தமிழ் இலக்கியக் கொடி பறக்கிறது என்றால் அதற்குக் காரணமானவர் சுப்பையா பிள்ளை அவர்கள்தாம் என்கிறார் மலேயா நாட்டறிஞர் டி சில்வா: "Tamil language and its culture was little known outside Tamil speaking areas before western missionaries started learning it for their evangelic works. Their efforts though praiseworthy, were confined to their own spheres of influence. It was due to the untiring efforts of Padmashri V. Subbiah Pillai and others that the Tamil literary flag spread to the English Speaking Countries."

கழகத்தின் தலையாய பணி திருக்குறட்பணியே என்று ஐயா அவர்கள் அடிக்கடி கூறுவர். திருக்குறளின்மீது ஐயா அவர்கட்கு இருந்த ஈடுபாட்டைச் சுவையான நிகழ்ச்சியைக் கூறி விளக்குகிறார் பண்டித ச. சாம்பசிவன் அவர்கள்: "இவர் இளமை முதற்கொண்டே திருக்குறளினிடத்து மிக்க ஈடுபாடு உடையவர்; வள்ளுவர் வழியில் வாழ்ந்து காட்டவேண்டும் என்ற துணிபு கொண்டவர். ஒருமுறை இவர் பாளையங்கோட்டையில் வழக்கறிஞராயிருந்த தம் உறவினர் சி. பி. சுப்பையாபிள்ளையவர்களின் இல்லம் சென்றிருந்தார். அப்பொழுது இருவரும்

உரையாடிக்கொண்டிருக்கையில் அவ் வழக்கறிஞர் தம் கைவிரல்களுக்குள் ஒரு சிறிய புத்தகத்தை மறைத்து வைத்து 'இஃது என்ன நூல் தெரியுமா?' என்ருர். திரு. வ. சு. பிள்ளைக்கு ஒன்றும் விளங்கவில்லை. சேக்சுபியர் எழுதிய 'ஒதல்லோ' என்ற ஆங்கில நூலே அஃது என்பது தெரிய வந்தது.

'நம் தெய்வத் திருக்குறளையும் இவ்வாறு வெளியிடவேண்டும்' என்ற எண்ணம் அன்றே இவர்தம் உள்ளத்துள் உதித்தது. எண்ணிய எண்ணியாங்கு முடிக்கும் திண்ணியராதலின் திருக்குறள் மூலத்தை $2'' \times 1\frac{1}{2}''$ அளவில் கையடக்கப் பதிப்பாகக் கண்கவரும் வனப்புடன் வெளியிட்டார் இவர். இக் குறட் பதிப்பின் கவினுறு அமைப்பினைப் பாராட்டி 1956இல் இந்தியக் குடியரசுத் துணைத்தலைவர் டாக்டர் இராதாகிருட்டிணன் அவர்கள் சான்று வழங்கியமையொன்றே, திரு வ. சு. பிள்ளையின் தனித் திறமையைக் காட்டும்.

திருக்குறளில்தான் ஐயா அவர்கட்கு எவ்வளவு நாட்டம். பலவகை அளவுகளில் மூலப்பதிப்புகள், உரைநூல்கள், ஆங்கிலத்தில் பல்வகையான மொழிபெயர்ப்புகள், மாநாட்டு மலர்கள், நாடக நூல்கள், கட்டுரை நூல்கள், பாடல் நூல்கள்—இவ்வாறு திருக்குறளைப் பரப்ப என்னென்ன முயற்சியை மேற்கொள்ள முடியுமோ அவ்வளவு முயற்சியையும் எடுத்துக்கொண்டார். டாக்டர். மு. வ. அவர்களின் 'திருக்குறள் தெளிவுரை' இதுவரை பத்து நூருயிரம் படிகட்கு மேல் விற்கப்பெற்றுத் தமிழ்நூல் வெளியீட்டுத்துறையிலேயே வேறு எந்த நூலும் பெருத பெருமையைப் பெற்றுவிட்டது.

பெங்களூர், தமிழ்ப் பேராசிரியர் டி. கே. நாகரம்பாள் அம்மையார் திருக்குறளைத் தமிழனின் 'பைபிள்' ஆக்கிய பெருமை ஐயா அவர்களையே சாரும் என்று ஒரே தொடரில் கூறியுள்ளார்.

"It is through him, the Universal Ethics 'Thirukkural' has become the Bible of every educated man in Tamilnadu moulding his character individually, socially and morally."

சங்கஇலக்கியம் முதல் இக்கால இலக்கியம் வரை எல்லா நூல்களையும் பழைய உரைகளுடனும் புதிய உரைகளுடனும் வெளியிட்டுள்ளது கழகம்.

இலக்கியத்துடன் மட்டும் நின்றுவிடாது வரலாறு, சமயம், த்துவம் போன்ற பழைய துறைகளிலும் சட்டம், ஆட்சிமொழி பான்ற புதிய துறைகளிலும் ஐயா அவர்கள் நூல்களை வளியிட்டார். ஐயா அவர்களின் புதுப்பணியை நீதிபதி. பு. ரா. பக்கிரிசங்கர் அவர்கள் பாராட்டுகிருர்:

"தமிழ் ஆட்சிமொழியாக ஆவதற்கு அரசில் உள்ளவர்கள் முயற்சி எடுப்பதற்குப் பல ஆண்டுகள் முன்பாகவே அதற்கான வழிகளுக்கு அடிகோலியவர் அவரேயாவர். ஆட்சிமொழியாக ஆகவேண்டும் என்றவர்கள் எல்லாம் ஆசைப்பட்டதோடு நின்றிருந்த காலத்திலேயே பல துறைகளிலும் நூல்களை வெளியிட்ட பெருமை அவரைச் சாரும்."

பல்வகை நூல்களை வெளியிட்டதுடன் ஐயா அவர்களின் பணி நின்றுவிடவில்லை. இலக்கியத்தை மக்களிடையே பரப்ப மாநாடுகள் நடத்தி நூல்கள் வெளியிட்டார். அதை வியந்து போற்றுகிறார் மறைந்த பேரறிஞர் டாக்டர் சி. இலக்குவனார்: "சங்க இலக்கியங்களை வங்காளக்குடாக் கடலிலே கொட்டு" என்று அறியார் சிலர் அரற்றியபோது, சங்க இலக்கிய மாநாடுகள் பல நடாத்திச் சங்க இலக்கியங்களின் ஓங்குயர் சிறப்பினை உலகறியச் செய்த பெருமை இலக்கிய மகிழ்நராம் இவருக்கே யுண்டு."

இவ்வாறு பல்வேறு பணிகளுக்கிடையில் அருந்தமிழ் நூல்கள் அனைத்தையும் தொகுத்துச் சென்னையில் மறைமலையடிகள் நூல் நிலையத்தை அமைத்துள்ளார். உலகத்தில் தமிழ்பற்றிய நூல் ஆய்வு செய்பவர் எந்த மூலையிலிருந்தாலும் இங்கே வந்தாகவேண்டுமென்ற நிலையை உண்டாக்கியவர்கள் ஐயா அவர்களே.

ஒரு பதிப்பு நிறுவனத்தை நடத்துவதுடன் நில்லாது நெல்லைச் சிவஞானமுனிவர் நூல்நிலையம், பல்லாவரம் மறைமலையடிகள் கலைமன்றம், நெல்லைக் குமரகுருபரர் குழந்தை வளர்ப்புப் பள்ளி, நீலாம்பிகையார் மகளிர் பல்கலைப்பள்ளி என்றிவ்வாறு துறைதோறும் துறைதோறும் தொண்டாற்றி வரும் ஐயா அவர்கள் அரசு செய்யவேண்டிய அரிய பணிகளைத் தாம் ஒருவராகத் தனித்து நின்று செய்துவருகிறார்கள். தனிமனிதர் என்ற நிலையிலிருந்து உயர்ந்து தாமே ஒரு நிலையமாக விளங்குபவர்கள்.

நடுவணரசு அவர்கள் பணியைப் பாராட்டி 'பத்மஸ்ரீ' என்ற பட்டத்தையும் தமிழக அரசு 'செந்தமிழ்ச் செல்வர்' என்ற பட்டத்தையும் அவர்கட்கு வழங்கிப் பெருமைபெற்றுள்ளன.

கழகம் ஆற்றிவரும் அரும்பணிகளுக்கு அரசு மேலும் உறுதுணையாக இருக்குமானால் இன்னும் நிறைவேற்றவேண்டிய பெரும்பணிகள் நிரம்ப உள்ளன என்கிறார் ஐயா. 84 அகவையெய்திய நிலையிலும் உள்ளம் தளராது இளமைத் துடிப்புடன் செயல்படும் அவர்கட்குத் தமிழக அரசு துணை நிற்கும் என்று உறுதியாக நம்புவோம்.

———

# மொழியாராய்ச்சியும் மொழியகழ்வாராய்ச்சியும் ஒன்றே

[ஞா. தேவநேயன்]

மொழி யென்பது, ஒரு மக்களினம் பேசும் பேச்சிலும் இயற்றும் இலக்கியத்திலும் ஆளும் சொற்களின் முழுமையான சொற்றொகுதி. சொற்களன்றி, மொழியென்று தனிவேருக ஒன்றுமில்லை. ஆதலால், சொல்லாராய்ச்சியே மொழியாராய்ச்சிக்கு அடிப்படை. சொல்லாராய்ச்சி ஒரு அல்லது பல சொற்களின் வரலாறு பற்றி யிருக்கலாம். அங்ஙனமே, மொழியாராய்ச்சியும் ஒரு அல்லது பல மொழிகளின் வரலாறு பற்றி யிருக்கலாம். மொழியென்பது, சொல்லையும் ஒரு மக்களினத்தின் சொற்றொகுதியையும் குறித்தலால், மொழியாராய்ச்சி என்பது சொல்லாராய்ச்சியைக் குறித்தற் கும் இடமுண்டு.

மொழிகளுள், இந்தியும் மலையாளமும் போன்று புதியவும் உள; கிரேக்கமும் இலத்தீனமும் போன்று முதியவும் உள. தமிழோ, முதியவற்றுள்ளும் முதிய முதன்மொழி. புதுமொழிகளும் முதுமொழிகளின் திரிபாகவே தோன்றியிருத்தலால், சொல்லா ராய்ச்சியைப் பொறுத்தமட்டில், இருவகை மொழியும் ஒன்றே.

ஆய்தல் என்பது, ஒரு பொருளை நுணுகி நோக்கி அதன் உண்மைத் தன்மையை உணர்தல்.

> "ஒய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்
> ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்."
>
> (தொல். உரி. 32)

ஆர்தல் நிரம்புதல். ஆரஆய்தல் ஆராய்தல்.

அகழ்தல் என்பது தோண்டுதல். மேன்மட்டத்தில் தோன்ருது புதைந்து அல்லது மறைந்து கிடப்பதைக் கல்லி யெடுத்தல் தோண்டுதல். அதுபோன்று ஆழ்ந்து ஆராய்தலும் தோண்டுதல். ஒ. நோ: தோண்டு—தேண்டு—தேடு—தேட்டம். நோண்டு—நோடு—நோட்டம், நோடு—நாடு—நாட்டம். நோண்டு —நேண்டு—நேடு—நேட்டம்.

பொதுவாக, சொற்களின் வேர்ப் பொருளைத் தெளிவாகக் காட்டக்கூடிய மொழி தமிழ் ஒன்றே. அதனுல்,

"எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே." (பெய. 1)

என்று தொல்காப்பியம் தெரிவிக்கின்றது. ஆயினும், தமிழிலும், எல்லாச் சொல்லும் கண்டமட்டில் அல்லது கேட்டமட்டில் வேர்ப் பொருளுணர்த்துவன அல்ல. பல சொற்களை ஆழ்ந் தகழ்ந் தாராய்ந்தே, அவற்றின் வேர்ச் சொல்லையும் மூலப்பொருளையும் அறிஞர் அறிதல்கூடும். அதனால்

"மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா." (உரி. 36)

என்று தொல்காப்பியமே கூறுகின்றது.

சொற்கள், ஒரு பொருட்சொல் என்றும், பல்பொருட்சொல் என்றும், பொருளுணர்த்தும் வகையில் இருவகைப் பட்டுள்ளன. பல்பொருட் சொல்லும், ஒரு வேர்ச்சொல் என்றும், பல்வேர்ச் சொல் என்றும், இருதிறப் பட்டுள்ளன. ஆதலால், வடிவொப்புமை யொன்றே நோக்கி, பல்வேர்ச்சொல்லை ஒருவேர்ச்சொல் லென்று மயங்குதல் தவறாம்.

எடுத்துக்காட்டாக, வெள் என்னும் இயற்சொல்லை எடுத்துக் கொள்ளலாம். இது, வெப்பம், வெண்ணிறம், வெறுமை, விருப்பம் முதலிய பல்பொருளுணர்த்துவது. அவற்றுள், வெப்பமும் விருப் பமும், நம்நாட்டுத் தட்பவெப்ப நிலையும் அதன் விளைவாக எழும் மக்கட் கருத்தும் நோக்கின், ஒன்றோடொன்று முரண்பட்டன வாகும்.

நம்நாடு பொதுவாக வெப்ப நாடாயிருப்பினும், கோடைக் காலத்திற் குளிர்ந்த குடிப்பையும் மாரிக்காலத்தில் வெப்பக் குடிப் பையும் விரும்புகின்றோம். சம தட்பவெப்ப நாடுகளிலும் மிகு தட்ப நாடுகளிலும் என்றும் குளிர்ந்திருப்பதால், அந் நாடுகளிலுள்ள மக்கள் வெப்பத்தை விரும்புவது இயல்பே. அதனால், தியாகராசப் பாடகர் பாட்டைச் செவிகுளிரக் கேட்டு இன்புற்றேன் என்று நமர் சொல்வது போன்று, அமெரிக்கநாட்டுத் தலைவர்க்குச் செருமனி யில் வெதுவெதுப்பான (Warm) வரவேற்பிருந்தது என்று குளிர் நாட்டார் கூறக் கேட்கின்றோம்.

தமிழில் வெம்மை என்னும் சொல்லிற்கு வெப்பம், விருப்பம் என்னும் இருபொருளும் உள்ளன.

"உருமமும் கருமமும் உருப்பமும் வெப்பமும்
அழனமும் கோரமும் அழலும் வெம்மை."

என்பது பிங்கலம் (7 · 105).

"வெம்மை வேண்டல்". (தொல். உரி. 36)

வெள்—வெட்டை = 1. வெப்பம். "அனல் வெட்டையாற் சுருண்டு". (இராமநா. யுத். 14) 2. நிலக்கொதி (W.) 3. காமச்சூடு. "காம வெட்டையிலே மதிமயங்கி" (தனிப்பா.) வெட்டைச்சூடு என்பது பெருவழக்கு.

தெ. வெட்ட, க வெட்டெ.

வெள் என்னும் இயற்சொல்லடிப் பிறந்த வெய்ய, வெய்யோன் முதலிய சொற்கள் வெப்பத்தைப் போன்றே விருப்பத்தையும் உணர்த்துகின்றன. இதனால், தமிழரின் முன்னோர் ஒரு காலத்தில் குளிர்நாட்டிலும் வாழ்ந்திருத்தல் வேண்டும் என்று சொல்லாராய்ச்சியில்லார் முடிவுகொள்ள நேர்கின்றது. கடல் கொண்ட குமரிநாட்டின் தென்கோடி வெப்பமண்டலத்தின் தென்னெல்லைக் குட்பட்டதே.

தமிழ்ச்சொற்கள் பெரும்பாலும் உகரச்சுட்டடியிற் பிறந்துள்ளன. உ—உல் என்னும் மூல அடி, குல், சுல், துல், நுல், புல், முல் என்னும் ஆறு வழியடிகளாகப் பிரிந்தும், திரிந்தும், பல்லாயிரக்கணக்கான சொற்களைப் பிறப்பித்துள்ளன. வகரம் உகர முதல் கொள்ளாமையால், வுகர அடியாகப் பிறந்த சொல் ஒன்றுமில்லை ஆதலால், ஒலிக்குறிப்புச் சொற்களொழிந்த வகர மெய்ம்முதற் சொற்களெல்லாம் பகரமுதலடியினின்றோ மகர முதலடியினின்றோதான் தோன்றியுள்ளன.

வெள் என்னும் இயற்சொல், வெப்பப் பொருளில் மெள் என்னும் அடியினின்றும், விருப்பப் பொருளில் பெள் என்னும் அடியினின்றும் திரிந்துள்ளது.

முள்—முளி. முளிதல் = எரிதல். முளி—மிளி—மிளிர். மிளிர்தல் = எரிதல், விளங்குதல். மிள்—மின் = ஒளி. ஒளி நெருப்பின் இயல். முள்—மிள்—மெள்—வெள்—வெய்—வெய்ய = வெப்பமான. வெய்யோன் = வெப்பமானவன், கதிரவன், கொடியோன்.

ளகரமெய் யகரமாகத் திரிதல் பெரும்பான்மை.

(எ - டு.) கொள்—கொய், தொள்—தொய். பிள்—பிய். பொள்—பொய்—பை. வள்—(வய்) - வை = கூர்மை.

புல்லுதல் = பொருந்துதல், விரும்புதல். புல்—புர்—புரி. புரிதல் = விரும்புதல். புல்—புள்—பிள்—பிண்—பிணு, பிணவு, பிணவல், பிணே. பிள்—பெள்—பெண்—பேண். பெட்டல் = விரும்பல்.

"பிணேயும் பேணும் பெட்பின் பொருள." (தொல். உரி. 40)

பெள்—வெள்—வெய்ய = விருப்பமான, வெய்யோன் = விரும்பியவன், காதலன்.

வெள்—வெய்—வெய்ம்மை—வெம்மை = வெப்பம், விருப்பம்.

திரிசொற்களில் யகரமெய் தொகுவது இயல்பே.

(எ - டு.) வேய்—வேய்ந்தோன்—வேந்தன். தேய்—தேய்வு—தேவு—தேவன்.

இங்ஙனம், சொற்களின் மூலத்தை ஆழ்ந்தாய்ந்துதான் காணவொண்ணும்.

தமிழரின் முன்னோர் குமரிநாட்டில் நண்ணிலக்கோட்டை அடுத்தே வாழ்ந்தவர். நாள் முழுதும் வெயிலில் உழைப்பவர் கருத்தும், நிழலில் வாழ்பவர் வெளுத்தும், இருப்பர். வெண்களமர் X கருங்களமர், வெள்ளாளர் X காராளர் என்னும் பெயரிணைகளை நோக்குக. உழுதுண்பவர் வெயிலிலும் உழுவித்துண்போர் நிழலிலும் இன்றும் வாழ்தல் காண்க.

இனி, உணவுச் சிறப்பினுலும் உண்ணு வறுமையாலும் வெளுத்தும் கருத்தும் போவதும் உண்டு. வெள்ளொக்கல் X காரொக்கல் என்னும் பெயரிணையை நோக்குக.

தமிழர் வெப்பமிக்க குமரிநாட்டினின்றே மேனுடுகட்குச் சென்றமையை, V. R. இராமச்சந்திர தீட்சிதரின் Origin and Spread of the Tamils என்னும் மறுக்கொணு அரிய ஆராய்ச்சி வரலாற்று நூலை நோக்கிக் காண்க.

மாந்தன் முதற்பெற்றோர் நண்ணிலக் கோட்டையடுத்த நாட்டிலேயே வாழ்ந்திருத்தல் கூடும். இதற்குரிய சான்றுகளையெல்லாம் இங்குக் கூற இடமின்மையால், இம்மட்டில் இக்கட்டுரை நிறுத்தப்பட்டுள்ளது.

மேலைநாட்டு மொழியாராய்ச்சியாளர் என்னென்ன உண்மை காண்பினும், அவையெல்லாம் குமரிநாட்டு மாந்தன் தோற்றத்திற்கோ தமிழன் தோற்றத்திற்கோ முரணுக இருத்தல் முடியாதென்பதையும், மொழியாராய்ச்சியும் மொழியகழ்வராய்ச்சியும் ஒன்றேயென்பதையும் இதனுல் திட்டவட்டமாய்த் தெரிந்துகொள்க.

———

# "அவல்"

[புலவர் இரா. இளங்குமரன்]

ஒரு முதுமகள்; அவள், 'அவுள்' 'அவுள்' என்று கூவி விற்றுக்கொண்டு வந்தாள். 'அவல்' என்பதைத்தான் 'அவுள்' என்கிறாள் என்பதை நினைத்ததும் என் எண்ணம் 'அவல்' மேல் 'ஆவ'லாய்ப் பாய்ந்தது.

அவல் அருமையான உணவு; குழந்தைகளா முதியவர்களா நோயாளர்களா எவருக்கும் கேடு செய்யாத உணவு; குசேலர் கண்ணன் நட்புக்குக் குறியாய் அமைந்தது; "கைத்தல நிறைகனி அப்பமொ டவல் பொரி" எனக் கரிமுகன் படையலுக்கு உகந்தது; உடனடி விருந்திற்கா, வெளியூர்க் கட்டுணவுக்கா, உடனே வந்து உதவுவது! 'அவல்' என்றால் 'அவல்'தான்!

நெல்லை நனையவைத்துப், பின்னே சிறிது உலர்த்திப் பக்குவ மாகப் பொரித்து, உரலில் இட்டு இடித்து, உமி நீக்கிப் புடைத்தெடுப்பது அவல் என்பது அறிந்ததே. ஆனால், அவல் என்பதன் பெயர்க்காரணம் அறியவேண்டுமே! 'அவுள்' விற்பவளைக் கேட்டுப் பயனில்லை; 'அவுள்' இடித்தவளைக் கேட்டும் பயன்படாது! மூடைமூடையாய் ஆலையில் 'அவல்' ஆக்குபவர்க்கும் எட்டாது! அவல் ஆராய்ச்சி ஆலாய்ப் பறந்தது!

அவல் தமிழ்நாட்டில் பண்டு தொட்டே வழக்கில் இருந்து வரும் ஒரு சிற்றுண்டி ஆகும். வேண்டுமட்டும் அவல் தின்று தண்ணிய நீரில் ஆடி மகிழ்வதைப் புறப்பாடல்,

> *"பாசவல் முக்கித் தண்புன லாடல்"*

என்கிறது (63). கரும்பும் அவலும் விரும்பி யுண்டனர் என்பதைத்

> *"திங்கரும்பொடு அவல் வகுத்தோர்"*

என்கிறது பொருநராற்றுப்படை (216).

அவல் இடிப்பதற்கு என்றே, வயிரமேறிய வலிய உலக்கைகள் இருந்தன என்றும், அவை 'அவலெறி உலக்கை' எனப் பெற்றன என்றும் அறிகின்றோம்.

> *"அவல்எறி உலக்கை"* (பெரும். 226; பதிற். 29)
>
> *"பாசவல் இடித்த பைங்காழ் உலக்கை"* (குறுந். 238)
>
> *"பாசவல் இடிக்கும் இருங்காழ் உலக்கை"* (அகம். 141)

பழம் பண்டமாம் அவல் இந்நாளிலும் வழக்கில் இருப்பதைத் தெருத் தெருவாகக் கூவி விற்கும் பொருளாக இருப்பதுடன்,

"அவலை நினைத்துக்கொண்டு உரலை இடித்தது போல"

'அவலை முக்கித் தின்னு; எள்ளை நக்கித் தின்னு"

என்பன போன்ற பழமொழிகள் வழக்கில் உண்மையும் தெளி விக்கும்.

அவல் ஆக்குவதற்குரிய தவசம் தக்க பக்குவத்தோடு இருக்கவேண்டும் என்பதை முன்னோர் தெளிவாகக் கண்டு, அத்தகையவற்றையே பயன்படுத்தினர் என்பது,

"தோரை அவற்பதம் கொண்டன"

எனவரும் மலைபடுகடாத்தால் (121) விளங்கும். தோரையாவது நெல். அது மூங்கிலில் விளைவது.

தினையரிசியால் அவல் செய்யப் பெற்றதையும், அவ்வரிசித் தேர்ச்சியையும், அதன் அழகையும் அருமையான உவமையால் விளக்குகிறது பொருநராற்றுப்படை.

"ஆய்தினை அரிசி அவையல் அன்ன
வேய்வை போகிய விரலுளர் நரம்பு"

என்பது அது. "தேர்ந்து கொண்ட தினையை இடித்த அவையல் போல (குற்றல் அரிசி போல) குற்றமற்ற விரலால் வருடும் யாழ் நரம்பு" என்கிறது. இதில் குற்றலரிசி 'அவையல்' எனப்பெறுவது நோக்கத் தக்கது. குற்றாத அரிசியை 'அவையா அரிசி" என்கிறது பெரும்பாண் (279).

'அவைத்தல்' என்பது இடித்தல் பொருள் தருதலையும், அவைத்த அரிசியின் சிறப்பையும்,

"அவைப்பு மாண் அரிசி" (அகம் 394)

"இருங்காழ் உலக்கை இரும்புமுகம் தேய்ந்த
அவைப்புமாண் அரிசி" (சிறுபாண். 194-5)

"கவைக்கதிர் வரகின் அவைப்புறு வாக்கல்" (புறம். 215)

என்பவற்றால் தெளிக.

அவைக்கப் பெற்ற ஒன்றை 'அவையல்' என்பது பொருத் தமேயன்றோ! அவிக்கப் பெற்றதும், இடிக்கப்பெற்றதும், துவைக்கப் பெற்றதும், பொரிக்கப் பெற்றதும், வறுக்கப்பெற்றதும் முறையே அவியல், இடியல், துவையல், பொரியல் என்று வழங்குவன போல அவைக்கப்பெற்றது 'அவையல்' என அமைந்ததாம்!

அவையல் அவைத்தல் என்பன குற்றிய அரிசியைப் பொதுவாகக் குறித்தலால், அதனைப் பொதுப்பொருளில் அரிசிக்குக் கொள்ளாமல் ஒரு சிற்றுணவுக்குக் கொண்டது பொருந்துமோ எனின், பொருந்தும். என் எனின், அவைத்த நிலையில் உண்ணப்பெறுவது அதுவே ஆகலின். ஏனை அரிசியோ பின்னர்ச் சமைத்து உண்ணப்பெறுவது ஆகலின், அடிசில், அவிழ்து, சோறு, சமையல், வாக்கல் முதலாய பல பெயர்களைப் பெறும்.

இனி அவையல் என்பது எப்படி அவலாகியது? துவைத்தலால் அமைந்த 'துவையல்' 'துவயல்' என ஐகாரம் கெட்டு அகரமாகி வழங்குவதில்லையா! அதுபோல் 'அவையல்' 'அவய'லாய்ப் பின்னர் யகரமும் கெட்டு, 'அவ'லாய் வழங்கலாயிற்றும். சங்கச் சான்றோர் நாளிலேயே, 'அவையல்' 'அவயல்' என்பவை அருகி அவல் என்பதே பெருகி வழங்கிற்று எனின் 'அவல்' என்பதன் தொல்பழைமை காண்டல் எல்லைக்கு உட்பட்டதாமோ?

சங்கநாளில் 'அவல்' என்பதற்குப் 'பள்ளம்' என்னும் ஒரு பொருள் பெருக்கமாக வழங்கியது. "அவலா கொன்றோ மிசையா கொன்றோ" என்றார் ஔவையார். குண்டு குழி, பள்ளம் கேணி இன்னவையும் பிறவும் அவலாகக் குறிக்கப்பெறக் காரணம் என்ன? இந்த உணவு அவலுக்கும். இட அவலுக்கும் உள்ள இயைபு என்ன ? இயைபு ஒன்றேதான்; அது தொழில் இயைபே என்க!

அவலெறி உலக்கை இருந்தது போலவே, நிலனகழ்தற்குக் குந்தாலி முதலிய கருவிகள் இருந்தன. அவற்றைக் கொண்டு நிலத்தைக் குற்றிக் கேணியும் கிணறும் தோண்டினர்; பாறையைத் தகர்த்தனர்; பரல்களைப் பெயர்த்தனர்; வயல் வளம் அமைத்தனர். ஆகலின் அவைத்தலால் (இடித்தலால், குற்றலால்) அமைந்த நிலம் அவையலாய் அவலாய்ப் பெயர் பெற்றதாம்! இதன் தொன்மையும், அவல் தொன்மையே.

"பரலவல் போழ்வில்" (மலை. 198)

"பரலவல் படுநீர்" (குறுந். 250)

"அவல் தோறும் தேரை தெவிட்ட" (ஐங். 453)

இனி, அவலம் என்பதன் மூலக்கூறும் அவலில் அமைந்துள்ளதை அறிந்து மகிழலாம்! தாக்கலும் இடித்தலும் இல்லையேல் 'அவலம்' இல்லையே! 'அவல என்னுள் அவலித்து இழிதலின்" என்னும் இளங்கோவடிகள் கூர்ப்பு, (கட். 186) இம் மூலங்கண்டுரைத்த முத்திரையே யன்றோ!

———

# பழந்தமிழில் சுட்டுப் பெயர்கள்

## (Demonstrative Pronouns)

[டாக்டர் தி. நடராசன்,

*விரிவுரையாளர், தமிழ்த்துறை, மதுரைப் பல்கலைக்கழகம்.*]

இக் கட்டுரையில் பழந்தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியம் சுட்டுப்பெயர்களைப்பற்றி என்னென்ன செய்திகளைத் தந்துள்ளது என்றும், அச் சுட்டுப் பெயர்கள் பழந்தமிழ் இலக்கியமாகிய பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூற்களில் எவ்வாறு அமைந்து வந்துள்ளன என்றும் ஒப்பிட்டு ஆயப்பட்டுள்ளன.

தொல்காப்பியர் சொல்லதிகாரப் பெயரியலில் சுட்டுப் பெயர்களைத் தொகுத்து உயர்திணைக்குரிமையுடையன, அஃறிணைக் குரிமையுடையன எனப் பாகுபடுத்தியுள்ளார்.

**உயர்திணை**

தொல்காப்பியர் அவன், இவன், உவன், அவள், இவள், உவள், அவர், இவர், உவர் என்னும் சுட்டுப் பெயர்கள் உயர்திணைப் பெயர்கள் எனக் குறிப்பிட்டுள்ளார்.

*"அவ்வழி*
*அவனிவ னுவனென வருஉம் பெயரும்*
*அவளிவ ளுவளென வருஉம் பெயரும்*
*அவரிவ ருவரென வருஉம் பெயரும்*
... ... ... ...
... ... ... ...
... ... ... ...
*பாலறி வந்த உயர்திணைப் பெயரே"* (தொ. சொ. 162)

**அஃறிணை**

தொல்காப்பியர் அது, இது, உது, அஃது, இஃது, உஃது, அவை, இவை, உவை, அவ், இவ், உவ் என்னும் சுட்டுப் பெயர்கள் அஃறிணைப் பெயர்கள் எனக் குறிப்பிட்டுள்ளார்.

*"அதுவிது வுதுவென வருஉம் பெயரும்*
*அவைமுத லாகிய வாய்தப் பெயரும்*
*அவையிவை யுவையென வருஉம் பெயரும்*

அவைமுத லாகிய வகரப் பெயரும்
... ... ... ...
... ... ... ...
பாலறி வந்த வஃறிணைப் பெயரே''. (தொ. சொ. 167)

சங்க இலக்கியத்தில் (உயர்திணை)

அவன் (நற், 25; அகம், 18)
இவன் (குறும், 14; கலி, 47)
உவன் (பரி, 12)
அவள் (குறும், 14; அகம், 33)
இவள் (குறி, 26; நற், 8)
உவள் (பரி, 11)
அவர் (நற், 11; குறும், 12)
இவர் (கலி, 13; அகம், 112)
உவர் (நற், 52; அகம், 79)

தொல்காப்பியர் கூறிய உயர்திணைச் சுட்டுப் பெயர்கள் அனைத்தும் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. மேலும் உகர முதலாக வரும் உயர்திணைச் சுட்டுப் பெயர்கள் சங்க இலக்கியத்தில் அருகியே காணப்படுகின்றன.

சங்க இலக்கியத்தில் (அஃறிணை)

அது (நற், 308; புறம், 195)
இது (நற், 47; அகம், 22)
உது (நற், 21; குறும், 179)
அஃது (ஐங், 46; புறம், 48)
இஃது (நற், 128; கலி, 61)
உஃது (— — —)
அவை (நற், 60; அகம், 76)
இவை (குறும், 223; புறம், 28
உவை (— — —)
அவ் (பதிற், 43)

இவ் (குறும், 247; புறம், 95)
உவ் (பரி, 2, 4)

தொல்காப்பியர் கூறிய அஃறிணைச் சுட்டுப் பெயர்களுள் உஃது உவை என்னும் பெயர்கள் ஒழிய ஏனையவை சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. மேலும் உகர முதலாக வரும் அஃறிணைச் சுட்டுப் பெயர்களும் சங்க இலக்கியத்தில் அருகியே காணப்படுகின்றன.

பகுப்பாய்வு

இச் சுட்டுப் பெயர்களைப் பகுத்தாராயின் மூவகைப் பொருளை உணர்த்துகின்றன. அகர முதலாக வருவன சேய்மைப் பொருளையும் (Remote) இகர முதலாக வருவன அண்மைப் பொருளையும் (Proximate) உகர முதலாக வருவன இடைமைப் பொருளையும் (Intermediate) உணர்த்துகின்றன. தொல்காப்பியரும் இப்பொருள் நிலையினை உணர்ந்து

"அ இ உ அம்மூன்றுஞ் சுட்டு" (தொ. எ, 31)

என்று குறிப்பிட்டுள்ளார்.

அ — சேய்மை (remote)
இ — அண்மை (proximate)
உ — இடைமை (intermediate)

மேலும் இச் சுட்டுப் பெயர்கள் பால், எண்களையும் உணர்த்தி நிற்கின்றன. சுட்டுப் பெயர்களுள் னகர இறுதியாக வருவன ஆண் பாலையும் (Masculine), ளகர இறுதியாக வருவன பெண் பாலையும் (Feminine), ரகர இறுதியாக வருவன பலர்பாலையும் (Epicene Plural) துகர இறுதியாக வருவன ஒன்றன் பாலையும் (Nueter singular), வைகார அல்லது வகர இறுதியாக வருவன பலவின்பாலையும் (Nueter plural) உணர்த்துகின்றன.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | ஆண்பால் | அவன் | இவன் | உவன் |
| 2. | பெண்பால் | அவள் | இவள் | உவள் |
| 3. | பலர்பால் | அவர் | இவர் | உவர் |
| 4. | ஒன்றன்பால் | அது | இது | உது |
| | | அஃது | இஃது | உஃது |
| 5. | பலவின்பால் | அவை | இவை | உவை |
| | | அவ் | இவ் | உவ் |

சுட்டுப் பெயர்கள் பால், எண் உணர்த்திப், பதிலிப் பெயர்களாகச் (Pronouns or substitutes) செயல்படுகின்றன.

| | | |
|---|---|---|
| கபிலன் | — | அவன் |
| ஔவை | — | அவள் |
| கபிலர், பரணர் | — | அவர் |
| குரங்கு | — | அது |
| குரங்கு, குட்டி | — | அவை |

**சுட்டுப் பெயர்களும் சாரியைகளும்**

தொல்காப்பியர் எழுத்ததிகார உருபியலில் உயிர் மயங்கியலில் சுட்டுப் பெயர்கள் எவ்வாறு சாரியைகளை ஏற்று வரும் என்றும் விளக்கியுள்ளார்.

**அது, இது, உது**

**உருபுப்புணர்ச்சி**

தொல்காப்பியர் சுட்டெழுத்துக்களை முதலாகக் கொண்டு உகரத்தினை இறுதியாகக் கொண்டுள்ள சுட்டுப் பெயர்கள் (அது, இது, உது) வேற்றுமை உருபுகளை ஏற்கின்ற பொழுது சுட்டுப் பெயர்களுக்கும், வேற்றுமை உருபுகளுக்கும் இடையே 'அன்' சாரியை இடையே வரும்போது சுட்டுப் பெயரிலுள்ள ஈற்று உகரமானது தான் ஊர்ந்து வந்த மெய்யினை நிலைபெறச்செய்து தான் அழிந்துவிடும் என்றும் கூறியுள்ளார்.

> ''சுட்டுமுத லுகரம் அன்னொடு சிவணி
> ஒட்டிய மெய்யொழித் துகரங் கெடுமே''
>
> (தொ. எ. 176)

| | | |
|---|---|---|
| (எ - டு) அது — அன் — ஐ | | அதனை |
| இது — அன் — ஐ | | இதனை |
| உது — அன் — ஐ | | உதனை |

**சங்க இலக்கியத்தில்**

அதனால் (நற், 42; கலி, 14)

அதற்கு (அகம், 180; புறம், 305)

இதற்கு (குறும், 184)

இதனின் (புறம், 322)

சங்க இலக்கியத்தில் 'உது' என்னும் வடிவம் வேற்றுமை உருபுகளை ஏற்று அமைந்து வரவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

**பொருட்புணர்ச்சி**

தொல்காப்பியர் உகர ஈற்றுச் சுட்டுப் பெயர்கள் பொருட் புணர்ச்சியில் அமைந்து வரும்பொழுது (வேற்றுமை உருபு மறைந்து வரும்) முன்னர் உருபுப் புணர்ச்சியில் குறிப்பிட்டது போன்று அன் சாரியை பெற்றுவரும் என்றும், வருமொழி முதலில் வல்லெழுத்து வரினும் 'அவ் வல்லெழுத்து இயற்கையாய் (இரட்டிக்காது) அமைந்து வரும் என்றும் கூறியுள்ளார்.

*"சுட்டுமுதல் இறுதி உருபியல் நிலையும்*
*ஒற்றிடை மிகா வல்லெழுத் தியற்கை"*

(தொ. எ, 263)

(எ - டு.)

அதன் கோடு, இதன் கோடு, உதன் கோடு
அதன் தோல், இதன் தோல், உதன் தோல்

**சங்க இலக்கியத்தில்**

அதன் கழிவு (அகம், 379)
அதன் தகுதி (புறம், 18)
அதன் திறம் (புறம், 28)
இதன் இயல்பு (புறம், 194)
இதன் பண்பே (புறம், 245)

சங்க இலக்கியத்தில் 'உது' என்னும் சுட்டுப் பெயர் பொருட் புணர்ச்சியில் அமைந்து 'அன்' என்னும் சாரியை ஏற்று வரவில்லை. அது இது என்னும் சுட்டுப்பெயர்கள் தொல்காப்பியர் கூறியது போன்று பொருட்புணர்ச்சியில் 'அன்' சாரியை பெற்று வந்துள்ளன.

**அவை, இவை, உவை, உருபுப்புணர்ச்சி**

தொல்காப்பியர் சுட்டெழுத்துக்களை முதலாகக் கொண்டு, ஐகாரத்தினை இறுதியாகக் கொண்ட சுட்டுப்பெயர்கள் (அவை, இவை, உவை) வேற்றுமை உருபினை ஏற்கின்றபொழுது சுட்டுப் பெயர்களுக்கும், வேற்றுமை உருபுகளுக்கும் இடையே 'வற்றுச்' சாரியை அமைந்து வரும் என்று கூறியுள்ளார்.

"சுட்டுமுத லாகிய ஐயென் இறுதி
வற்றொடு சிவணி நிற்றலும் உரித்தே"

(தொ. எ, 177)

(எ - டு.)

அவை — வற்று — ஐ அவையற்றை
இவை — வற்று — ஐ இவையற்றை
உவை — வற்று — ஐ உவையற்றை

சங்க இலக்கியத்தில் மேற்காட்டிய அமைப்பில் அவை, இவை, உவை என்னும் சுட்டுப் பெயர்கள் அமைந்து வரவில்லை.

மேலும் சங்க இலக்கியத்தில் 'அவை' என்னும் சுட்டுப் பெயர் ஓரிடத்து 'இற்று' என்னும் சாரியையினைப் பெற்று வந்துள்ளது.

"அவையிற்றுள் முறை வெள்ளம் மூழ்கி" (பரி, 2.)

தொல்காப்பியர், 'இற்று'ச் சாரியை பற்றிக் கூறினாரில்லை. பிற்கால இலக்கண நூலார் நன்னூலார் சாரியைகளைத் தொகுத்துக் கூறும்பொழுது 'இற்று'ச் சாரியையினையும் குறிப்பிட்டுள்ளார் என்பது இங்குக் கருதத்தக்கது.

பொருட்புணர்ச்சி

தொல்காப்பியர் அவை, இவை, உவை என்னும் சுட்டுப் பெயர்கள் பொருட்புணர்ச்சியில் அமைந்து வரும்பொழுது முன்னர் உருப்புப் புணர்ச்சியில் குறிப்பிட்டது போன்று 'வற்று'ச் சாரியையினைப் பெற்றுவரும் என்று கூறியுள்ளார்.

"சுட்டு முதல் இறுதி உருபியல் நிலையும்"

(தொ. எ, 281)

(எ - டு.) 'அவையற்றுக் கோடு'
'இவையற்றுக் கோடு'
'உவையற்றுக் கோடு'

சங்க இலக்கியத்தில் மேலே காட்டியன போன்ற அமைப்புகள் காணப்படவில்லை.

அவ், இவ், உவ் உருபுப்புணர்ச்சி

தொல்காப்பியர் சுட்டெழுத்துக்களை முதலாகக்கொண்டு வகரத்தினை இறுதியாக உடைய சுட்டுப் பெயர்கள் (அவ், இவ்,

உவ்) வேற்றுமை உருபுகளை ஏற்கின்றபொழுது 'யாவை' என்னும் வினப்பெயர் வேற்றுமை உருபு ஏற்கின்றபொழுது யாவையின் ஈற்று ஐகாரமும் அது ஊர்ந்துவரும் மெய்யும் கெட்டுப் பின்னர் வினப்பெயருக்கும் வேற்றுமை உருபுக்கும் இடையே வற்றுச் சாரியையினைப் பெற்று வருவது போன்று, சுட்டுப் பெயர்களுக்கும், வேற்றுமை உருபுகளுக்கும் இடையே 'வற்று'ச் சாரியை அமைந்துவரும் என்று கூறியுள்ளார்.

*"சுட்டு முதல் வகரம் ஐயும் மெய்யுங்*
*கெட்ட இறுதி யியல்திரி பின்றே"*

(தொ. எ, *183*)

(எ - டு.) அவ் — வற்று — ஐ அவற்றை
இவ் — வற்று — ஐ இவற்றை
உவ் — வற்று — ஐ உவற்றை

சங்க இலக்கியத்தில்

அவற்றை (பரி, 6; கலி 147)
அவற்ருெடு (கலி. 19)
அவற்றின்மேல் (கலி, 85)
அவற்றிற்கும் (பரி, 2)

சங்க இலக்கியத்தில் இவ், உவ் என்னும் சுட்டுப் பெயர்கள் 'வற்று'ச் சாரியையினைப் பெற்று அமைந்து வரவில்லை. 'இவ்' என்னும் சுட்டுப் பெயர் தொல்காப்பிய மொழியில் (the language of Tolkāppiyam) ஒரு சிலவிடங்களில் 'வற்று'ச் சாரியையினைப் பெற்று வந்துள்ளது.

இவற்ருெடு (தொ. பொ. 149)
இவற்றின் (தொ. பொ, 207)

பொருட்புணர்ச்சி

தொல்காப்பியர் 'அவ்', 'இவ்', 'உவ்' என்னும் சுட்டுப் பெயர்கள் பொருட் புணர்ச்சியில் அமைந்து வருகின்றபொழுது முன்னர் உருபுப் புணர்ச்சியில் குறிப்பிட்டது போன்று 'வற்று'ச் சாரியையினைப் பெற்று வரும் என்று கூறியுள்ளார்.

*"சுட்டுமுத லாகிய வகர இறுதி*
*முற்படக் கிளந்த உருபியல் நிலையும்"* (தொ. எ. 378)

(எ - டு.) 'அவற்றுக் கோடு'
'இவற்றுக் கோடு'
'உவற்றுக் கோடு'

சங்க இலக்கியத்தில்

அவற்றோரன்ன (புறம், 54; தொ. எ, 86)
அவற்றியல்பு (தொ. சொ, 143)

மேலும் சங்க இலக்கியத்தில் 'இவற்றுக்கோடு', 'உவற்றுக் கோடு' போன்ற அமைப்புகள் காணப்படவில்லை.

ஆக, தொல்காப்பியர் குறிப்பிட்ட சுட்டுப் பெயர்களுள் 'உஃது' 'உவை' என்னும் பெயர்கள் சங்க இலக்கியத்தில் காணப்படவில்லை என்றும், மேலும் பொதுவாக உகர முதலாக வுடைய சுட்டுப் பெயர்கள் சங்க இலக்கியத்தில் அருகியே காணப் படுகின்றன என்றும், உது என்னும் சுட்டுப் பெயர் புணர்ச்சியில் 'அன்' சாரியையினைப் பெற்று வரவில்லை என்றும், 'அவை', 'இவை', 'உவை' என்னும் சுட்டுப் பெயர்கள் புணர்ச்சியில் 'வற்று'ச் சாரியையினைப் பெற்று வரவில்லை என்றும், 'அவை' என்னும் சுட்டுப் பெயர் ஓரிடத்துத் தொல்காப்பியர் குறிப்பிடாத '—இற்று—'ச் சாரியையினைப் பெற்று வந்துள்ளது என்றும், 'இவ்'. 'உவ்' என்றும் சுட்டுப் பெயர்கள் புணர்ச்சியில் 'வற்று'ச் சாரியையினைப் பெற்று வரவில்லை என்றும் உணரலாம்.

குறிப்பு: நன்னூல், 244.

———

### எதிர்ப்பில் வளர்ந்த தமிழ்

இந்தி எதிர்ப்புக்குப் பிறகுதான் தமிழார்வம் பெருகிப் புதுப்புதுக் கவிஞர்கள் - புலவர்கள் - புதுப்புதுப் பொருளை ஆராய்ந்து வெளியிடுகிறார்கள். நல்ல உரைநடையாசிரியர் கள் - மொழிபெயர்ப்பாளர்கள் - பேச்சாளர்கள் தொகை ஓங்கி வளர்ந்தது; வளர்ந்தபடி இருக்கிறது! எதற்குமே ஆபத்து என்றால்தான் - அதற்குப் பாதுகாப்பும் - பாதுகாக்கும் உணர்ச்சியும் தோன்றுகின்றன.

பேரறிஞர் அண்ணா

# விநாயகப் பெருமான்

[தி. இராசமாணிக்கம், பி.ஏ., பி.காம்., விசாரத்,

இணைப்பதிவாளர், தனி அதிகாரி, திருநெல்வேலி மத்திய கூட்டுறவு வங்கி (வரையறை) திருநெல்வேலி.]

எந்தக் காரியத்தைத் தொடங்குமுன்பும், விநாயகரை வணங்குவது இந்துக்களின் மரபு. விநாயகரைப் பரவிச் செயலைத் தொடங்கினுல் எண்ணியதை எண்ணியவாறு செய்து முடிக்கலாம் என்பதும், இல்லையெனில் இடையூறுகள் ஏற்பட்டுக் காரியம் தடைப்படும் என்பதும் அவர்களது அசைக்கமுடியாத நம்பிக்கை. தம்மை வணங்குவோருக்கு இடையூறு நேராது தடுப்பதாலும், ஏனையோருக்கு இடைஞ்சல் ஏற்படுத்துவதாலும் இவர் 'விக்னேசுவரர்' எனப்படுகிறுர். தம் தந்தையாகிய சிவபெருமான் தம்மை நினையாது முப்புரம் எரி செய்ய முனைந்தபோது அவருக்கே இடையூறு விளைவித்தவர்.

> ''முப்புர மெரிசெய்த வச்சிவ னுறைரத
> மச்சது பொடிசெய்த வதிரா''

என்பது அருணகிரிநாதர் திருவாக்கு. அடியார்களின் இடர்களைக் களையவே இவர் தோன்றினுர் என்பது,

> ''பிடியதன் உருவுமை கொளமிகு கரியது
> வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
> கடிகண பதிவர அருளினன்''

என்ற திருஞானசம்பந்தப் பெருமானது திருவலிவலம் திருப்பதிகத்தினின்றும் தெளிவாகிறது. இதையே நம்பியாண்டார் நம்பி தமது திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலையில் ''என் இடர்கெடுத்துத் தன்னை நினையத் தருகின்ருன்'' எனக் குறிப்பிடுகிருர். மேலும் ''இடர்கள் முழுதும் அவனருளால் எரிவீழும் பஞ்சென மாயும்'' என்பது விநாயக புராணம்.

விநாயகர் என்ருல் தமக்கு மேல் நாயகர் அற்றவர் என்பது பொருள். அஃதாவது இவரே ''ஆரும் அளவறியாத ஆதியும் அந்தமுமான'' முழு முதற்கடவுள் என்பது. இதை இவரது திருவுரு வலியுறுத்துகிறது. வெட்ட வெளியில் ஓங்கார நாதத்தினின்றும் உலகம் உண்டானதாகக் கொள்ளப்படுகிறது. யானை வடிவு ஓங்காரத்தினை நினைவூட்டுவதாக உள்ளதால், விநாயகரின்

யானை வடிவு இவர் ஓங்கார வடிவினர் என்பதைப் புலப்படுத்து கிறது. இது பற்றியே விநாயகர் நூற்றெட்டுப் பெயர்களில் (அட்டோத்திர சதநாமங்களில்) "ஓம் ஓங்காராயநம:" என்று துதிக்கப்படுகின்ருர். இவர்தம் நான்கு கைகள் வானவர் இயல்பையும், தும்பிக்கை விலங்கு இயல்பையும் ஏனைய வடிவு மனித இயல்பையும் குறிக்கின்றன. மத்தள வயிறும் குறுகிய கால்களும் பூத இயல்பையும், ஒரு பக்கம் கொம்பு இன்றி இருப்பது பெண் இயல்பையும், மற்ருெரு புறம் உள்ள கொம்பு ஆண் இயல்பையும் காட்டுகின்றன. முகம் அஃறிணையையும், ஏனைய வடிவு உயர் திணையையும் குறிப்பிடுகின்றன.

*"மறிகடலுங் குலவரையும் மண்ணும் விண்ணும்*
*திருந்தொளிய தாரகையுந் திசைகளெட்டுந்*
*திரி சுடர்கள் ஓரிரண்டும் பிறவுமாய*
*பெருந்தகையை"*

என்ற அப்பர் திருவாக்கிற்கேற்ப உலகமெங்கும் நீக்கமற ஒன்ருய் நிற்கும் பொருள் இவர் என்பதையும் இவரது திருவுரு சுட்டிக் காட்டுகிறது. மேலும் இவரது மத்தள வயிறு உலகம் யாவும் இதில் அடங்கியுள்ளதைக் காட்டுவதாகக் கொள்ளப்படுகிறது. எனவே, இதுவும் இவரே முழுமுதற் கடவுள் என்பதை வலியுறுத்து கிறது.

*"ஒருமேக முகிலாகி ஒத்துலகந் தானுய் ஊர்வனவும்*
*நிற்பனவும் ஊழிகளுந் தானுய்ப்*
*பொருமேவு கடலாகிப் பூதங்கள் ஐந்தாய்"*

என்ற சுந்தரர் திருவாக்குப்படி இறைவன் எல்லா உயிர்களிடத்தும் நீக்கமற நிறைந்துள்ளமையால் உயிர்களிடத்து, மனிதராயினும், விலங்காயினும், பறவையாயினும் சரி, வேறுபாடில்லை என்பதே பொருளாகிறது. விநாயகர் வடிவோ யானை முகத்தைக் கொண்டது. உடலமைப்போ மனித இயல்பைக் கொண்டுள்ளது. ஆனல் இவரது ஊர்தியோ பெருச்சாளி. உயிர்களிடத்து வேறுபாடில்லை என்பதையும், எல்லாம் இறை வடிவு என்பதையும் இது தெளிவாக்குகிறது.

*"ஐங்கரம் நால்வாய் முக்கண் அருட்சிவ களிறும்"*

விநாயகர் பல வடிவங்களில் வணங்கப்படுகிருர். பாலகணபதி, தருணகணபதி, பக்தி விக்னேசுவரர், வீர விக்னேசுவரர், லட்சுமி கணபதி, உச்சிட்ட கணபதி, மகாகணபதி, ஊர்த்தவ கணபதி, பிங்கல கணபதி, நடன கணபதி, ஏகதந்த கணபதி, ஹேரம்ப ணபதி, பிரசன்ன கணபதி ஆகியவை ஆகமங்களில் குறிப்பிடப்

பட்டுள்ளதாகத் திரு கோபிநாதராவ் தமது நூலில் சுட்டிக் காட்டி யுள்ளார். பொதுவாக விநாயகர் தும்பிக்கையையும் சேர்த்து ஐந்து கைகளுடன் காணப்படுகிறார். இவருடைய கைகளில் மோதகம் பாசம் மற்றும் அங்குசம் ஆகியவை உள்ளன.

> "அஞ்சு கரமும் அங்குச பாசமும்"

என்பது ஔவையார் திருவாக்கு.

> "சதுர்ப்புயங் களுங்கை
> இடக்கை அங்குசமும் பாசமும்"

என்று இராமலிங்க சுவாமிகள் அருளிச்செய்துள்ளார். இவருக்கு மோதகம் மிகவும் பிடித்தமாகக் கருதப்பட்டு வருகிறது. பிள்ளையார் சதுர்த்தியன்று மோதகம் படைத்து வழங்குவது வழக்கம். மோதகம் எள், வெல்லம் ஆகியவற்றால் செய்யப்படும் இனிப்புப் பொருள். பொதுவாக ஒரு பொருளைத் தானம் செய் என்றவுடன் "தாரை வார்த்துக் கொடு" என்று சொல்வது உலக வழக்கு. எனவே மோதகத்தில் உள்ள எள் உலகப்பற்றைக் குறிப்பதாகக் கொள்ளலாம். அதை மனிதன் தியாகம் செய்ய வேண்டும்; அப்போதுதான் மறுமை இன்பம் கிடைக்கும்; மறுமை இன்பத்தை வெல்லம் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம்.

மற்றொரு கையில் உள்ள பாசம் "புலன் ஐந்தும் மயங்கி அகங்குழையப் பொருவேலோர் நமன் தமரின்" எம பாசத்தைக் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். அங்ஙனம் நமன்தமர் எம பாசத்துடன் அணுகுமுன், தம் திருவடி நிழலை அடைந்தால் உய்யலாம் என்று சொல்லுமாப் போன்று இவரது கையில் பாசம் உள்ளது. அல்லது பாசத்தை, குடும்ப பாசம் உலகப் பற்று என்று கொண்டால் வாழ்க்கையில் உள்ள பாசம் ஒரு நாளைக்கு எமபாசமாக மாறும். எனவே மறுமை இன்பத்தை அடையப் பற்றினை ஒழித்துவிட்டுப் பற்றற்றானைப் பற்றவேண்டும் என்று பொருள் கொள்ளலாம்.

இன்னொரு கையில் உள்ள அங்குசத்தை அறிவாகக் கொள்ள வேண்டும். மனித மனம் பல்வேறு ஆசைகளில் சிக்குண்டு, தட்டுத் தடுமாறி அல்லல் அடைகிறது. இதைத்தான்,

> 'சூரிட்ட நடையில்என் போரிட்ட மனதைநான்
> சொல்லிட்ட முடன்அணைத்துத்
> துன்றிட்ட மோனமெனும் நன்றிட்ட அமுதுண்டு
> சும்மா இருத்தியென்றால்

காரிட்டிதற்குமுன் யாரிட்ட சாபமோ
கண்டிலேன் அம்மம் மஓர்
கணமேனும் நில்லாது பொல்லாது புவியிற்
கறங்கெனச்சுழல் கின்றதே''

என இராமலிங்க அடிகள் மிகவும் அழகாக எடுத்துரைக்கிருர் எனவே அதை ஒரு நிலையில் நிறுத்தினுலன்றி, இறையருளே அடைய இயலாது. அல்லல் உற்று அவதி அடையும் மனமாகிய யானையை அறிவு என்னும் அங்குசத்தைக் கொண்டு அடக்கித் தம் திருவடியிலே ஒன்ற வேண்டும் என்ற கருத்தின் அடிப்படையில் இவர் அங்குசத்தைத் தம் கையில் கொண்டு உள்ளார் என்று பொருள் கொள்ளலாம்.

உலகத் தோற்றுவாயாக அமைந்து உலகமெங்கும் தாம் நீக்கமற நிறைந்துள்ளமையையும், எவ்வாறு தம் கருணையைப் பெறலாம் என்பதையும் குறிப்பாலே சுட்டிக் காட்டும் விநாயகரின் வடிவு உய்த்து உணரற்பாலதாம்.

———

## வழக்கறிஞரா? வழக்குரைஞரா ?

இந்த இரண்டு சொற்களில் வழக்கறிஞர் என்ற சொல்லே எழுத்திலும் பேச்சிலும் பெரு வழக்காக இருந்து வருகின்றது. உரைப்பார்க்கும் அறிவு முதன்மையாதலால் 'வழக்கறிஞர்' என்பதே மேல்.

வழக்கறிஞரும் 'வழக்குரைஞராய்' இருப்பது சிறப்புத்தான். பலர் வழக்கறிஞராயிருந்தாலும் அவருள் வழக்குரைக்க முடியாதவர் மிகச் சிலரே இருப்பர்.

'பிரதாப முதலியார் சரித்திரத்தில் இரண்டு சொற்களும் வருகின்றன. ஆனல் 'வழக்கறிஞர்' என்ற சொல்லே கொள்ளத் தக்கது.

—அழகரடிகள்

வழக்கறிஞர், வழக்குரைஞர் (Vakil) என்னும் சொற்களில் 'வழக்கறிஞர்' என்ற சொல்லே பொருத்தமுடைத்தாகும் எனத் தெரிவிக்கின்றனர் அழகரடிகள். கழக ஆங்கிலத் தமிழ் அகர வரிசையில் 'வழக்கறிஞர்' என்றும் சென்னைப் பல்கலைக் கழக ஆங்கிலத் தமிழ் அகர வரிசையில் 'வழக்குரைஞர்' என்றும் கூறப் பட்டுள்ளன—அறிஞர்கள் கவனிப்பார்களாக.

—வ. சு.

# தனித்தமிழியக்கத் தந்தை மறைமலையடிகள்

[திரு. தி. நா. அறிவொளி, க. மு.]

தமக்கெனவே தனிவழியில் வாழ்ந்தவர் - அடிகள்
தம்வழியில் தமிழினத்தை ஈர்த்தவர் - தாமே
தலைமைநிலை தாங்கியுரை யாற்றுவார் - தமிழர்
தன்மதிப்பைக் காத்திழிவை மாற்றுவார் - அறம்
சாற்றுவார் - தமிழ் போற்றுவார்.

சமயத்தைத் தமிழுடனே காத்தவர் - அடிகள்
தமிழ்நெறியே நன்னெறியாய்ப் பார்த்தவர் - அருட்பா
தந்தவட லூரார்போல் ஆர்த்தவர் - பொதுநிலை
சார்கழகப் பணியினிசை போர்த்தவர் - அருள்
கோத்தவர் ஒளி யாத்தவர்!

தனித்தமி ழியக்கத்தை யாக்கினர் - அடிகள்
தமிழுணர்வைத் தமிழகத்தில் தேக்கினர் - நாளுந்
தமிழறிவைப் பேருரையால் ஊக்கினர் - எழுத்தால்
தமிழாய்வை வான்வரையுந் தூக்கினர் - பகை
தாக்கினர் - தனிப் போக்கினர்!

கனித்தமிழில் இனித்தநடை ஆய்ந்தவர் - அடிகள்
கலைத்திறனர் பலதுறையுந் தோய்ந்தவர் - ஆய்வின்
கனிச்சுவையை வழங்கிநலம் ஏய்ந்தவர் - நலம்
வேய்ந்தவர் - ஒளி வாய்ந்தவர்!

தனித்தமிழ் வளத்தினை மனத்தினில் இருத்திக்
கனித்தமிழ்ச் சுவைபொருட் கலைத்திறம் பொருத்திப்
பன்னூல்கள் மறைமலையார் தந்தார்!
பொன்னூல்கள் இவர்போலார் தந்தார்?

இனித்திடும் உழைப் பினில் இசைத்திறன் செறித்தே
தனித்திறத் தமிழ்க்கடல் இயற்றமிழ் பொறித்தே
என்னாளும் மறைமலையார் தந்தார் -
பொன்னூல்கள் இவர்போலார் தந்தார்?

உழைப்பொடு முயர்பொருள் சுவடிகள் வடித்தே
தழைத்தொளி தமிழ்பெறச் சமைத்தவர் அடிகள்
நன்னூல்கள் மறைமலையார் தந்தார் -
பொன்னூல்கட் கிணை நூலார் தந்தார்?

பிழைத்திடும் கொடியவர் இழைத்திடும் கொடுமை
புழுத்திடக் கெடுத்தவர் புலத்துறை வளமை
இன்னூல்கள் மறைமலையார் தந்தார் -
இந் நூல்கட் கிணை நூலார் தந்தார்?

———

# ஏகார ஓகாரத் தியற்கையு மற்றே*

[மயிலம், ஆ. சிவலிங்கனுர்,

உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை-20]

**எகர ஒகரம் புள்ளி பெறுதல்**

ஆசிரியர் தொல்காப்பியர் தமது தொல்காப்பிய நூன் மரபில்,

''எகர ஒகரத் தியற்கையு மற்றே,' (16)

என்ருெரு நூற்பா அமைத்துள்ளார். இதன் முன்னர் அமைத்த நூற்பா:

''மெய்யின் இயற்கை புள்ளியோடு நிலையல்'' (15)

என்பதாகும். ''மெய்யெழுத்துகள் எல்லாம் புள்ளி பெற்று நிற்கும்'' என்பது இதன் கருத்து. அதனுல், 'எகர ஒகரத் தியற்கையு மற்றே' என்ற நூற்பாவுக்கு உரையாசிரியர் யாவரும்

''எகர ஒகரங்களாகிய குற்றெழுத்துக்களின்
இயல்பும் புள்ளி பெறுதலாகும்''

என்று பொருள் கூறினர். இதை அடியொற்றியே நன்னூலாரும்.

''தொல்லை வடிவின எல்லா எழுத்தும்ஆண்
டெய்தும் எகரம் ஒகரமெய் புள்ளி'' (நன். 98)

என்ருர். எ், ஒ்—குறில், எ, ஒ—நெடில் எனக் காட்டுகள் தந்தனர் உரையாளர்கள்.

1. பேராசிரியர், க. வெள்ளை வாரணனுர் கருத்து வருமாறு :

''பண்டைக் காலத்து எ, ஏ ஆகிய குறில் நெடில் இரண்டிற்கும் 'எ' என்ற வடிவும், ஒ, ஓ ஆகிய இரண்டிற்கும் 'ஒ' என்ற வடிவும் வரிவடிவில் வழங்கப்பட்டன. என்பதும், அவற்றுள் குறிலிது நெடிலிது என்ற வேறுபாடு உணர்தற்குக் குற்றெழுத்தைக் குறிக்குமிடத்து அவ்விரண்டன் மேலும் புள்ளியிட்டெழுதி

---

*உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தில் 9—5—80 அன்று நடைபெற்ற கருத்தரங்கில் படிக்கப்பட்டது.

னர்கள் என்பதும் இவ் விதியாற் புலனும். இவ்வாறு புள்ளியிடுதல் எகர ஒகரங்களுக்கே யன்றி மெய்யூர்ந்த எகர ஒகரங்களுக்கு உண்டென்பது தந்திவர்மன் ஆட்சியில் 4ஆம் ஆண்டில் (கி. பி. 800—840) திருவெள்ளறைக் கிணறு ஒன்றில் வெட்டப்பட்ட சாசனத்து, ''நான்காவ தெடுத்து'' ''பெருங் கிணறு'' என்ற சொற்களின் மெய்யூர்ந்த எகரங்கள் புள்ளியிட்டெழுதப் பெற்றிருத்தலால் அறியப்படும்''

என்று எழுதிச் சான்ருக,

''நேரிழையார் கூந்தலினோர் புள்ளிபெற நீள்மரமாம்
நீர் நிலையோர் புள்ளிபெற நெருப்பாம்''

''மயிர்நிறுவி மற்றதற்கோர் புள்ளி கொடுப்பின்
செயிர்தீர் மரமாகும் சென்று'' (நன்னூல் 268 மேற்கோள்)

இதன்கண் நேரிழையார் கூந்தல், மயிர் என்பன 'ஓதி' என்று கொள்ளப்படும். அதன்கண் உள்ள 'ஓ' என்பதற்குப் புள்ளி கொடுத்தால் 'ஒதி' என்ற மரத்தைக் குறிக்கும். அவ்வாறே, நீர்நிலை என்பது 'ஏரி'. அதன் ஏகாரத்துக்குப் புள்ளியிட்டால் 'எரி' என நெருப்பையுணர்த்தும்''. (தொல்காப்பியம்—நன்னூல் பக்- 49,50)

என்பதையும் எழுதிக் காட்டினர்கள்.

## 2. திரு. வேங்கடராசுலு ரெட்டியார் கருத்து

''உயிர் எழுத்துகளுள் எகர ஒகரம் ஒழிந்த பத்து எழுத்துகளும் புள்ளியில்லாதனவாய் வழங்க, இவ்விரண் டெழுத்துகள் மட்டும் புள்ளி பெற்று வழங்குதலை நோக்குமிடத்துத் தமிழ் மொழிக்கு இலக்கணம் வகுத்த தொல்லாசிரியர், எகர ஒகரங்கள் வடமொழியில் இல்லையாகலின்* அவற்றிற்கு ஆண்டு வரிவடிவின்மையின், தமிழில் அவற்றிற்கு வழங்கிய தனிவடிவினைக் கொள்ளாமல் ஏகார ஓகாரங்களின் வடிவிற்குப் புள்ளியிட்டு

---

*''வடமொழியிலும் எகர ஒகர ஒலிகள் - எழுத்துகள் இருந்திருக்கின்றன. ராணுயனீய சாகை, சாத்ய முக்ரி சாகை என்ற இரண்டும் குறுகிய எகர ஒகரங்களைக் கொண்டன என்றும் மகாபாஷ்யத்திற் கூறப்பட்டது''. என்று டாக்டர், பி. சா. சுப்பிரமணியசாத்திரியாரவர்கள் தமது 'வடமொழி நூல் வரலாறு' என்ற நூலில் எழுதியுள்ளார்கள். (வடமொழிநூல் வரலாறு பக். 134.)

வழங்கினராவர் எனத் தோன்றுகின்றது. முதல் எழுத்துக்களுள் ஏனை இருபத்தெட்டு எழுத்துக்களுக்கும் தனித்தனி வடிவம் அமைத்து வழங்கிய தமிழ்மக்கள் இவ்விரண் டெழுத்துக்கட்கு மட்டும் தனிவடிவம் அமைத்திலர் என்று கொள்ளுதல் பொருந்து வதன்று. இவ்வாருயின் முதல் முதலில் இலக்கணம் வகுத்த ஆசிரியர், வடமொழி நோக்கி நெடுங் கணக்கினுள் வைப்பு முறையில் வேறுபாடு செய்தது போலவே வரிவடிவிலும் வேறுபாடு செய்தாராவர். (தொல்காப்பிய எழுத்ததிகார ஆராய்ச்சி பக். 20) என எழுதினர் திரு. வேங்கடராசுலு ரெட்டியார் அவர்கள்.

பேராசிரியர் வெள்ளைவாரணனுர் கூறியது, எகர ஒகரங்கள் புள்ளியிட்டெழுதப்பட்டன என்ற கருத்தினை வலியுறுத்துவதாகும். திரு. ரெட்டியார் கூறியதில் 'உயிர் பன்னிரண்டனுள் பத்து எழுத்துக்களுக்குத் தனித்தனிவடிவங்கண்ட தமிழர்கள் எகர ஒகரத்துக்கு மட்டும் தனித்தனிவடிவம் அமைக்கவில்லை என்பது பொருந்துவதன்று' என்று கூறிய கருத்து மிக மிகப் பொருத்த மானதாம். ஆனுல், வடமொழியில் எகர ஒகரம் இல்லாமையால் அவற்றுக்குரிய தனிவடிவினைக் கொள்ளாமல் ஏகார ஓகாரங்களையே புள்ளியிட்டுக் குற்றெழுத்தாக்கிக் கொண்டனர் என்று கூறியது பொருந்துவதன்ரும். வடமொழியை நோக்கித் தமிழர் தமது மொழியை—எழுத்தை அமைத்துக் கொண்டவரல்லர். வட மொழியாளர் தமிழரொடு கலப்பதற்குத் தமிழ் எழுத்தின் வரிவடி வத்தையும் சொற்களையும் கொண்டனர் என்பது தெளிவு. அவர் ஆரிய மொழி, சமஸ்கிருதம் (சீர்திருத்திக் கொள்ளப்பட்டது) ஆக்கப்பட்டதே அதற்குச் சான்று. வடமொழியை நோக்கித் தமிழர் எழுத்துக்களை அமைத்துக் கொண்டவராயின், 'அம்' 'அ:' என்ற எழுத்துக்களை அமைத்துக் கொள்ளாதது ஏன்? மெய் யெழுத்துக்களில் 'க' வருக்கம் 'ச' வருக்கம் முதலியவற்றையும் ஷ, ஸ, க்ஷ, ஶ, ஹ, ஸ்க, ஸ்ப என்ற எழுத்துக்களையும் அமைத்துக் கொள்ளாததும் ஏன்? தமிழ்ச் சொற்களைத் தமது ஆரிய எழுத்துக்களில் எழுதத் தொடங்கிய வடமொழியாளர், எட்டன், ஒட்டன் போன்ற பெயர் இயற் சொற்களை எழுதும்போது, தங்களிடம் எகர ஒகரங்களாகிய குற்றெழுத்துக்கள் இல்லாமையால் தங்களிடம் உள்ள ஏகார ஓகார நெட்டெழுத்துக்களையே மேலே புள்ளியிட்டுக் குற்றெழுத்துக்களாக்கி எழுதிக் கொண்டனராவர். அவர்கள் வழக்கம் பிற்காலத்தில் - உரையாசிரியர்கள் காலத்துக்கு முற்காலத்தில் வந்திருக்க வேண்டும். புதிய வழக்கு ஒன்று வருமாயின் அது மக்களால் விரும்பி யேற்கப்படுமாயின் நிலைக்கும். இல்லையேல் சிலர் மேற்கொள்ளச் சிறிதுகாலம் இருந்து மறையும். அந்நிலையில் எகர ஒகரங்கள் புள்ளியிட்டு, ஆரியரால் வழக்கில்

விடப்பட்ட காலத்தில் அவ் வழக்கம் சில காலம் இருந்து பின் மறைந்தது.

### 3. என் கருத்து :

தொல்காப்பியர் காலத்தில் எகர ஒகரத்துக்குப் புள்ளியிட் டெழுதும் வழக்கம் இல்லை. அவர் இப்போது காணப்படும் நூற் பாவை இயற்றியிருக்க மாட்டார். அவர் இயற்றியது,

"ஏகார ஓகாரத் தியற்கையு மற்றே"

என்பதற்காகத்தான் இருத்தல் வேண்டும். இந் நூற்பாவானது மகரக் குறுக்கம் கூறிய,

"அரையளவு குறுகல் மகரம் உடைத்தே
இசையுடன் அருகும் தெரியுங் காலை" (நூல்மரபு. 13)

என்ற நூற்பாவினையடுத்த,

"உட்பெறு புள்ளி யுருவா கும்மே" (நூல்மரபு. 14)

என்ற நூற்பாவுக்குப் பின்னரும்,

"மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்" (நூல்மரபு. 15)

என்ற நூற்பாவுக்கு முன்னரும் கூறப்பட்டிருத்தல் வேண்டும். காரணம் வருமாறு :

"அரையளவு குறுகல்" என்ற நூற்பா, 'மகரம் தன் அரை மாத்திரையிற் குறைந்து வரும்' என்பது. அதை வரிவடிவில் எப்படிக் காணலாம் என்றால், அம் மகரத்தின் உள்ளால் புள்ளி யிட்டுக் காணலாம். *ஆகவே அதற்கு வரிவடிவம் இஃது என்பதைக் குறிக்க வந்தது "உட்பெறு புள்ளி யுருவா கும்மே" என்ற நூற்பா.

அதுபோலவே ஏகாரக் குறுக்கமும் ஓகாரக் குறுக்கமும் வரிவடிவில் உணர வேண்டுவதற்குப் புள்ளியிட்டு எழுதுதல் வேண்டும் என்பதைக் கூறவந்த ஆசிரியர் தொல்காப்பியர், "ஏகார ஓகாரத்தியற்கையு மற்றே" என்றார்.

ஏகாரக் குறுக்கம் என்பது ஒன்றுண்டா? நன்னூலார் கூறிய சார்பெழுத்துகளுள் காணப்படவில்லையே என்று வினவலாம்.

*போன்ம் - போன்ம் எனக் காண்க.

நன்னூலார் தொல்காப்பியர் கூறிய அனைத்தையும் கூறிவிடவில்லை. தொல்காப்பியர் ஏகாரக் குறுக்கம் உண்டு என்றார். சொல்லதிகார இடையியலில்,

"ஈற்றுநின் றிசைக்கும் ஏயென் இறுதி
கூற்றுவயின் ஓரள பாகலும் உரித்தே" (38)

என்றார். இதற்கு,

"செய்யுள் இறுதிக்கண் நின்றிசைக்கும் ஈற்றசையேகாரம் கூற்றிடத்து ஒரு மாத்திரைத்தாகலும் உரித்து"

என்று உரையெழுதி,

"கடல்போல் தோன்றல காடிறந் தோரே" (அகம். 1.)

என உதாரணமும் காட்டினார் சேனாவரையர். இளம்பூரணரும் தெய்வச்சிலையாரும் இக் கருத்தினரே.

எனவே, ஏகாரக் குறுக்கம் வரிவடிவில் உட்பெறு புள்ளி யுடையதாகும் என்பதைத்தான் தொல்காப்பியர் "ஏகார ஒகாரத் தியற்கையும் அற்றே" என்றார். 'காடிறந் தோரே' என்பதில் ஈற்று ஏகாரத்துக்கு உட்பெறு புள்ளி வடிவைக் காட்ட 'காடிறந் தோ·ர", எனக் குறிக்கலாம். அல்லது 'ரே' என்பதில் 'ரே' என்று புள்ளியிட்டும் காட்டலாம்.

ஏகாரக் குறுக்கம் சொன்ன ஆசிரியர் ஒகாரக் குறுக்கம் சொல்லவில்லை. (ஒருகால் சொல்லி மறைந்ததோ?) ஒன்று கூறி அதுபோலும் ஒன்றைக் கூறாதுவிடுதல் ஆசிரியர் இயல்பே.

"ஓரள பாகும் இடனுமா ருண்டே
தேருங் காலை மொழிவயி னான"

என ஐகாரக் குறுக்கம் கூறியவர், ஔகாரக் குறுக்கம் கூறவில்லை. உரையாசிரியர்கள் ஒன்றென முடித்தலாற் கொண்டனர். அது போலவே ஒகாரக் குறுக்கம் விடுபட்டது என்னலாம்.

எனவே, ஆசிரியர் தொல்காப்பியர் 'எகர ஒகரத் தியற்கையு மற்றே' என நூற்பா அமைத்திருக்கமாட்டார்; "ஏகார ஒகாரத் தியற்கையு மற்றே" என்றுதான் அமைத்திருப்பார் என்பதை யறியலாம்.

———

குறிப்பு : இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம் திருவனந்தபுரத்தில் நடத்திய நான்காவது கருத்தரங்கில் (1972) ஏகாரக் குறுக்கம் உண்டு என்ற கருத்தை வெளிப்படுத்தியவர், சென்னைப் புரசைவாக்கத்தைச் சார்ந்த புலவர், க. வா. சச்சிதானந்தம் அவர்கள். (ஆய்வுக் கோவை. பக். 364.)

## பயன்பட்ட நூல்கள்


1. தொல்காப்பியம்—இளம்பூரணர், சேனாவரையர், தெய்வச் சிலையார் உரைகள்.
2. நன்னூல்
3. தொல்காப்பியம்—நன்னூல் - க. வெள்ளை வாரணனார். (1962)
4. தொல்காப்பிய எழுத்ததிகார ஆராய்ச்சி - திரு. வே. வேங்கடராகலு ரெட்டியார். (1944)
5. வடமொழி நூல் வரலாறு—டாக்டர், பி. சா. சுப்பிரமணிய சாத்திரியார். (1946)
6. ஆய்வுக் கோவை—இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற வெளியீடு. (1972)


———

## கள்ளும் பதனீரும்

*பாளையைச் சீவினால் பருகுதற்கு இனிய சுவைநீர் வடிகிறது. அதனைக் கள்ளாக்கிக் களிக்கிறது ஓர் உள்ளம்; பதனீராக்கிப் பயன் கொள்கிறது மற்றோர் உள்ளம்; கள்ளாவதும் பதனீராவதும் பாளையில் இல்லை; பயன் கொள்வார் உள்ளத்தில்தான் உள்ளன! உள்ளம் உயர்ந்தால் படைப்பும் உயர்கிறது! உள்ளம் தாழ்ந்தால் படைப்பும் தாழ்கிறது! உயர்வும் தாழ்வும் உள்ளத்திலேயன்றி, வெளியே என்ன இருக்கிறது?*

—கலைமணி.

# ஒன்றை மறந்தால்தான் ஒன்றை நினைக்கலாம்

[செல்வக்கண்ணன்]

எழுத்தாளர் எழிலன் அந்த மாடி அறையிலே தங்கியிருந்தார். அப்பொழுது நடந்த ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிடுகிருர்:

''சரியாகக் காலை ஒன்பதுமணி. அந்தப் 'பெண் சிட்டு' அவள் குடியிருக்கும் மாடியின் முற்றத்திற்கு வந்தாள். அவள் இருக்கும் இடத்திற்கு நேர்வடக்கே 30 மீட்டர் தொலைவில் உள்ள மாடியில் நான் இருக்கிறேன். எனக்கு நேரே பலகணி. அவளும் பார்க்கலாம்; நானும் பார்க்கலாம்! என்னைப் பார்த்து வணக்க மிட்டாள். பதில் வணக்கம் செய்யவேண்டும் என்பதைக் கூட நான் மறந்துவிட்டேன், அவ்வளவு திகைப்பு!

இவள் யார்? இவளுக்கும் எனக்கும் என்ன தொடர்பு? ஏன் இவள் எனக்கு வணக்கமிட வேண்டும்? திகைப்பில் இருந்து நான் விடுபடவில்லை. அவள் விரைந்து மறைந்துவிட்டாள்.

மறுநாள் காலை ஒன்பது மணி. அப்படியே வந்து வணங்கிஞள். நான் வணங்குவதா? வேண்டாவா? கையைத் தூக்கியும் தூக்காமலும் வணங்கினேன். தொடர்ந்து ஒன்பது மணியா, அந்தப் 'பசுங்கிளி' காட்சி தருவாள்! ஒரு வணக்கம் போடுவாள்; ஓடிவிடுவாள்!

இவள் எப்படியோ என்னைத் தெரிந்து வைத்திருக்க வேண்டும். என் கதைகளை இவள் படித்திருக்கக் கூடும்; பட்டி மன்றத்திலோ, கருத்தரங்கத்திலோ யான் கலந்துகொண்டபோது கண்டிருக்கக் கூடும்; ஒருவேளை இவள் பெற்றோர் எனக்கு அறிமுகமானவராக இருக்கலாம்; அவர் சொல்லிவைத்து இவள் இப் படிச் செய்யலாம்; எத்தனையோ பேர் பாராட்டி எழுதுகிருர்களே, அப்படி இவளுக்கும் ஓர் ஆர்வம் இருந்து அதனை வணக்கத்தால் காட்டலாம்.

என்னென்னவோ நினைத்தேன்; ஆனால் நிறைவுபடவில்லை. நேரிலே பார்த்தும், வணக்கம் செலுத்தத் தயங்கும் நாணமிக்க பெண்மை—அறிமுகம் செய்யாமலே—இன்னர் என்று அறிந் திருந்தால் கூட—எட்டத்தில் இருந்து வணங்குகிற வழக்கம் உண்டா? அதையும் ஒரு பெண்பிள்ளையினிடமா எதிர்பார்க்க முடியும்? ஒருமுடிவுக்கும் என்னல் வரமுடியவில்லை.

ஒருநாள் பலகணிக்கு நேரே இராமல் மறைந்துகொண்டேன். மிகத் திகைத்துப்போனேன்; அன்றைக்காவது வணக்கமிடாமல் சென்ருளா? இல்லை! நான் நிற்கும் திசைநோக்கிக் கும்பிடு போட்டாள். என்ன வேடிக்கை! திசை நோக்கித் தொழுத பரதனுக்கு இணையான பாவையா இவள்? இனி எண்ணிப் பயனில்லை. நாளைக்கு ஊர்க்குப் புறப்படவேண்டும். அதற்குள் உண்மை தெரிந்து விடவேண்டும் என முடிவு செய்தேன்.

சரியாகக் காலை 8-55 மணிக்கு அவள் குடியிருக்கும் பகுதிக்கு நடந்தேன். பலபேர் குடியிருப்பு; அது ஒரு வாய்ப்பு; இவர், 'அவரைத் தேடிவந்தார்' என்றும், அவர், 'இவரைத் தேடிவந்தார்' என்றும் ஒருவருக்கு ஒருவர் நினைத்துக்கொண்டு ஒருவரும் தலையிட மாட்டார்கள்; திருமணப் பந்தியில் போய்ச் சாப்பிட்டு வந்துவிடுவது போலக் கவலையில்லாமல் பார்த்துவிட்டு வந்துவிடலாம்!

அவள் வெளியே வந்தாள்; வழக்கமாக நிற்கும் இடத்திற்குச் சென்ருள்; திரும்பி ஒரு கும்பிடு போட்டாள்; நான் அவளைப் பார்த்துப் புன்முறுவல் செய்தேன். "எனக்குத்தான் நீ வணக்கம் செய்கிருய்; நானே வந்துவிட்டேன் நேரில்; தெரியவில்லையா?" என்பதை விளக்கும் புன்முறுவல் அது. அவளோ பதிலுக்கு 'ஊகும்'! வழக்கம்போல் ஓடிவிட்டாள். எனக்கோ திகைப்பின் மேல் திகைப்பு. அவள் எங்கேபோய் நின்ருளோ அங்கேபோய் நின்று அவள் திரும்பிப்பார்த்து வணங்கிய திசையைப் பார்த்தேன். நான் இருந்த அறையின் பலகணி தெரிந்தது. அதனைக் கடந்து வானளாவ நின்ற கோயில் கோபுரமும் தெரிந்தது! அதனைப் பார்த்தேன். ஆ! ஆ! நான் ஏமாறிப் போனேன்; அவள் கோயிலை நோக்கி வணங்கியதை என்னை வணங்கியதாக நினைத்து ஏமாந்துபோனேனே என்ற நாணம் என்னைப் பற்றிக்கொண்டது. அந்த ஏமாற்றம் எனக்கொரு புதிய செய்தியைத் தந்தது.

அவள் என்னை வணங்கியதாக நான் நினைக்கும்போது கோயிலை நான் நினைக்கவில்லை; கோயிலை வணங்கியதாக நினைக்கும்போது என்னை நினைக்கவில்லை! ஒன்றை மறந்தால்தான் ஒன்றை நினைக்கமுடியும் போலும்! இதைத்தானே திருமூலர்,

> *"மரத்தை மறைத்தது மாமத யானை*
> *மரத்தின் மறைந்தது மாமத யானை"*

என்ருர்? "நாயைக் கண்டால் கல்லைக் காணேம்; கல்லைக் கண்டால் நாயைக் காணேம்" என்று பழமொழியாக நம்மவர் உரைத்தனர். இதனை நினைவுபடுத்தும் 'இன்ருர் எனத் தெரியாத' எல்லே, இளங்கிளியே!' இனிது வாழ்க."

———

# அகல்—ஓர் மதிப்பீடு

[புலவர். மா. புதுமைவாணன்]

சொல்லியன் நெறிமுறை 'அகல்' என்னும் ஆய்வு நூலினைக் கருத்தூன்றிக் கற்றேன் இந் நூல் என்னுடைய கெழுதகை நண்பரும் தமிழ்ப் பெருங்கடலில் மூழ்கி எடுத்து வரும் ஆணிமுத்துகளால் அழகு மாலைகளை உருவாக்கி அருந்தமிழ் அன்னைக்குச் சூட்டி மகிழ்வதையே தம் பெருங் கடனாகக் கொண்டவருமாகிய புலவர் மணி, திரு. இரா. இளங்குமரன் அவர்களின் படைப்புகளுள் ஒன்று.

மொழித் துறையில் முட்டறுத்து விளங்கும் பாவலர் ஏறு தேவநேயப் பாவணர் அவர்களின் வழிநின்று தமிழன்னையின் தனித் தன்மையை உயர்த்தும் பணியினைப் பெரும்பேறாகக் கருதிச் செயல்பட்டு வருபவர் திரு. இரா. இளங்குமரன் ஆவார்கள்.

இளமை தொட்டு இன்றுவரை திரு. இரா. இளங்குமரன் அவர்களோடு எனக்கு இறுகிய பிணைப்புண்டு. அன்னாரது நுண்மாண் நுழைபுலத்தை யான் கலந்துரையாடல் மூலமும் இலக்கியச் சொற்பொழிவை அடிக்கடி கேட்டு வருவதன் மூலமும் அன்னாரது அரிய தமிழ்ப் படைப்புகளைப் படித்துச் சுவைப்பதன் மூலமும் நன்கு அறிவேன்.

சடையப்ப வள்ளலாரின் பேராதரவு கம்பநாடருக்குக் கிடைத்திருக்காவிட்டால் அவர் கவிச்சக்கரவர்த்தியாய்த் திகழ்ந்திருக்க முடியாது. அநபாய சோழனின் அரவணைப்பு இன்றேல் சேக்கிழார் பேராற்றல் குடத்துள் இட்ட விளக்கெனக் குறுகிப் போயிருக்கும். குன்றின் மேல் இட்ட விளக்கென ஒளி பெற்றிருக்காது. அப்துல் காசிம் ஆதரவில்லையாயின் உமறுப்புலவர் ஊரறிந்த புலவராய் விளங்கி இருக்க முடியாது. அது போலத் தாமரைச் செல்வர் திரு. வ. சுப்பையாபிள்ளை அவர்களின் அன்பும் ஆதரவும் கிடைத்திருக்காவிட்டால் தனித் தமிழ்த் தந்தை மறைமலையடிகள், சொற்பொருள் நுண்விளக்கப் பேராசான் தேவநேயப் பாவணர் வழியில் தனித்தமிழ் நலம் பேணும் புலவர் மணி திரு. இரா. இளங்குமரன் அவர்களின் அறிவாற்றலை அருந்தமிழ் நாடு பெற்றிருக்குமா! என எண்ணவே இதயம் நடுங்குகிறது! தமிழர்கள் செய்த தவப் பலன் இன்று நமக்கு இரா. இளங்குமரன் அவர்கள் கிடைத்திருக்கிறார்கள். இஃது உண்மை. அன்பால் விளைந்த வெறும் புகழ்ச்சியன்று.

சைவமும் தமிழும் செழிக்கத் தம் வாழ்நாளைப் பணயம் வைத்து உழைத்து வருபவர் தாமரைச் செல்வர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்களாவார்கள். புலவர் மணி திரு. இரா. இளங்குமரன் அவர்களின் புலமைத் திறத்தைப் பைந்தமிழ் நாடு

பெற்றுப் பயன் பெறச் செய்த அன்னருக்குத் தமிழகம் பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

இனி நூலைப் பற்றிய கருத்துரையை என் சிற்றறிவுக்கு எட்டிய அளவில் விளக்குவது தவருகாது எனக் கருதுகிறேன். "ஆகல்'' என்னும் ஒரு சொல்லைக் கொண்டு ஆசிரியர் சொல் மூலம், அதன் கிளைப்பு, தழைப்பு விரிவாக்கங்களாக 92 சொற்களைத் தொடர்பு படுத்தி விளக்கி இருக்கிறார்.

'அகலம்' என்பதற்கு அகலக்கல்வி, அகலவுரை, மார்பு, விரிவு, நிலம், வானம், பெருமை, அகலுதல் என்னும் பொருள் களைக் கூறி அவற்றை விரித்துரைக்கும் பாங்கு நூலாசிரியரின் சொல்லாராய்ச்சித் திறத்தை ஒளிவிடச் செய்யும் சுடராகத் திகழ்கிறது.

'அகலம்' என்பதற்கு 'வானம்' எனவும் பொருள் உண்டு என்பதை விளக்க வந்த ஆசிரியர், 'நிலத்தடங்கலையும் கவித்து விளங்கும் அகற்சித் தோற்றத்தால் வானும் அகலம் ஆயிற்று' எனத்தரும் விளக்கம் எண்ண எண்ண இனிக்கிறது.

"மொழிப்பொருள் காரணம் விழிப்பத் தோன்ரு'' என்னும் தொல்காப்பிய அடிக்கு, நாம் நேரே காணும் பொருள்களைக்கூட நுட்பமாகத் தெரிந்து கொள்ள முடியாதுபோதல் இயல்பு என்னும் நடைமுறை இயல்பினைச் சுட்டி விளக்கி இருக்கும் திறம் ஆசிரியர் உலக நடையை எவ்வளவு ஊன்றிக் கவனித்துள்ளார் என்பதைத் தெளிவுபடுத்துகிறது.

'ஆல்' என்பதற்கும் 'அகல்' என்பதற்கும் இயல்பால் அமைந்த தொடர்பினை விளக்குங்கால் 'ஆல்' என்பது ஒரு மரத்தின் பெயர் என்பதும், அம் மரம் ஏனைய மரங்களினும் அகன்று விரிந்து செல்லும் தன்மையது என்பதும் எவரே அறியார்? என வினவெழுப்பி வினவுந்திறன் பழந்தமிழ் உரையாசிரியர்களின் பாங்கினையே நினைவுறுத்துவதாய் அமைந்துள்ளது.

'ஆலவாய்' என்பதற்குப் புராண வரலாற்றுப் பழங்கதையை நீக்கி 'வையை யாறு பெருக்கெடுத்துக் கடல்போல் வருவதும், வந்து மதுரை மதிலை முட்டிக்கொண்டு செல்வதும் பரிபாடலில் குறிக்கப்பட்டுள்ள செய்தி யெனவும் அதனல் அப் பெயர் பெற்ற தெனவும் அறிவொடு பொருந்த விளக்கந் தந்திருக்கும் புதுமை போற்றத்தக்கது.

'முத்தாலம்மன்' என்னும் பொருள் பொதிந்த சொல் 'முத்தாரம்மன்' எனத் திரிந்து வழங்குவதையும், 'ஆலாற்றி' எடுத்தல் என்னுஞ் சொல்லை நூல்களிலும் அகரவரிசையிலும் 'ஆலத்தி' எடுத்தல் எனப் பொருளற்ற சொல்லாக்கிவிட்டதையும்

'குறு' என்னும் அடைமொழியைப் பெற்ற 'ஆலம்' குற்ருலமாகும். குற்ருலம் என்பது குத்தாலம் என இழிவழக் கடைந்ததையும் 'கருமை' என்னும் பொருள்தரும் 'ஆலம்' என்னுந் தமிழ்ச் சொல்லே வட சொல்லாக்கி மயங்கிய மடமையையும் தக்க ஆதாரங்கள் காட்டித் தவிடு பொடியாக்கியுள்ளார் நூலாசிரியர்.

'அகல்' என்பதிலிருந்து கிளைத்த அகறல் என்னும் சொல் லாராய்ச்சியில் ஒளி அகல அகல (விரிய விரிய) இருள் அகலும் (ஒடுங்கும், நீங்கும்) என்பதும், அவ்வகற்றுதலே உலகை உய்விக்கும் என்பதும், ஒரு கொம்பில் பழுத்த நல்ல கனியும் நச்சுக் கனியும்போல அகற்சியும் அழிவும் உள என விளக்கி இருப்பது ஆசிரியரின் நுண்மாண் நுழை புலத்தை உலகறியச் செய்கிறது.

'ஆற்றல் பண்பை உலகம் ஆண்மையினிடம் மிக எதிர் பார்க்கிறது' என்னும் கருத்தை,

''ஆற்றலோ டாண்மை தோன்ற
ஆருயிர் வழங்கி வீழ்ந்தார்''

என்னும் சிந்தாமணிப் பாடலடியைக் கொண்டும், மூன்று தலேயாய ஆற்றல்களே ''ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல்'', ''ஆற்றுவார் ஆற்றல் இகழாமை'', ''ஆற்றுவார் ஆற்றல் பணிதல்'' என்னுங் குறளடிகளேக் கொண்டும் விளக்கி இருக்கும் திறம் கற்றுச் சுவைப் போருக்குக் கனிவைத் தருவனவாகும்.

அறிவின் முக்கூறுகளுள் நடுவணது அகற்சியாம். அதுவே தலேயானதுமாம்! நடுவணது எய்த இரு தலேயும் எய்தும், என்பது இவ்வறிவுப் பொருளுக்கும் பொருந்துவதாம். ஆழ்தலும் நுணுக்கமும் அறிவின் அகற்சியால் ஆம் என்றும், அகழ்ச்சிக்கு ஆழ்தலும் நுணுக்கமும் அருந்துணேயாம் என்றும் எளிதின் நோக்கினும் தெளிவாம். ஆகலின், அகன்று விரிந்த அறிவார்களே 'அகன்ருேர்' என்றனர். 'அகன்ருேர்' பின்னே 'ஆன்ருேர்' ஆயினர், என அகற்சியின் வாயிலாய் 'ஆன்ருேர்' வந்த வகையை அழகுற விளக்கி இருக்கும் ஆசிரியரின் சொல் லாய்வு அறிஞர் பெருமக்களுக்கு அரு மருந்தெனலாம்.

''சொல்லியன் நெறிமுறை'' என்னும் இந்நூல் ஒரு வரிசை யாய்த் தொடரும் என ஆசிரியர் உரையில் குறிப்பிட்டபடி இம் முயற்சி இடையருது தொடர்வது நலம். தனித் தமிழ்ச் சொற் களேத் திரித்தும் கொச்சைப் படுத்தியும் வேண்டுமென்று குறும்பு செய்யும் வீணர்களே அடையாளந் தெரிந்துகொள்ள இம்முயற்சி பெரிதுந் தேவை. ஆசிரியரின் அருந்தமிழ்ப் பணி தொடரட்டும்; முயற்சி வெற்றி பெறட்டும்.

———

## *கலை உலகில் தமிழ்இன்பம் கொட்டக்கொட்ட கொடிகட்டிப் பறந்த கோகிலம் மறைந்ததோ!

[டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி]

இளந்தளிர்ப் பருவம் முதல் நரை மூதாட்டியாகக் காட்சி தந்த பருவம் வரையில்—தமிழகத்தின் கலைக்கருவூலமாக விளங்கிய கொடுமுடிக் கோகிலம் அம்மையார் சுந்தராம்பாள் அவர்களின் மறைவு தாங்கொணாத துயரச் செய்தியாகும்.

கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும், வகை கிடைத்த குளிர் தருவின் நிழல் தரும் சுகம் போன்றது அவர்களது இசை:

ஞானப் பழத்தைப் பிழிந்து வழங்கும் சங்கீதச் சிகரமாக அவர்கள் விளங்கினார்கள்; இந்தியத் திருநாட்டின் விடுதலைக் கான முரசங்களில் ஒன்றாக முழங்கிய வீராங்கனை அவர்கள்!

நாடக மேடையில் மாமேதை கிட்டப்பாவுடன், இணையாக நடித்து, ஈடுகொடுத்து நடித்து—தமிழ்நாட்டுக் கூத்தரங்கத்தின் புகழுக்கு ஒளிவிளக்கு ஏற்றி வைத்த கலைப்புதல்வி அவர்கள்!

நந்தனாராகத் திரைப் படத்தில் தோன்றினார்—நான் சிறுவனாக இருந்தபோது அந்தப் படத்தைப் பார்த்தேன். இன்னமும் என் நினைவு நந்தனார் அப்படிப்பட்ட உருவம் உடையவராகத்தான் இருந்திருப்பார் என்பதுதான்!

ஜெமினியின் ஔவையார் படத்தில் அமிழ்தினும் இனிய தமிழ்மொழிப் பாடல்களை அவர் ஒலித்தது இன்னமும் செவிகளை விட்டு அகலவில்லை!

நீண்ட இடைவெளிக்குப் பிறகு—மீண்டும் 'பூம்புகார்' படத்தில் கவுந்தி அடிகளாகத் தோன்றிய அம்மையார்,

*"மனச்சாட்சி உறங்கும் போதுதான்—*
*மனக்குரங்கு ஊர் சுற்றக் கிளம்பி விடுகிறது."*

என்ற உரையாடலுக்கு உயிரூட்டி உச்சரித்ததை என்னால் மறக்கவே முடியாது—யாராலும் மறக்க முடியாது.

அம்மையாரோடு பழகும்போது அன்பு பொழியும்!

இதயமே உதயமாகும்! கலைத்துறையில்—இசைத்துறையில் - கொடிகட்டி ஆண்ட அந்தக் கோகிலம்—ஆம். கொடுமுடிக்

---

* இசையரசி கே. பி. சுந்தராம்பாள் அவர்கள் மறைவு குறித்து 25-9-80 வானொலியில் ஆற்றிய இரங்கலுரை.

கோகிலம்—தன்னுடைய உயிர்ச் சிறகுகளை மூடிக்கொண்டுவிட்டது! இனி, அந்தக் கோகிலம் கூவாது ! ஆனல்—விஞ்ஞான வளர்ச்சி, அந்தக் குரலை நாம் என்றென்றும் கேட்டு இன்புறும் வண்ணம் நிலைபெற்றதாக ஆக்கி இருக்கிறது.

பக்திச்சுவைநனி சொட்டச் சொட்ட
தமிழ் இன்பம் கொட்டக்கொட்ட

கலைச்சோலையில் பாடிக் கொண்டிருந்த குயில் பறந்தோடிவிட்டது ! நமது காலத்தில் ஔவையாராக நடமாடியவர், இன்று முதல் படமாக மாறிவிட்டார். வாழ்க அவர் புகழ்.

நன்றி. முரசொலி

---

## ஏழிசை வல்லபி கே. பி. சுந்தராம்பாள் மறைவு

கொடுமுடிக் கோகிலம், ஏழிசை வல்லபி என்று அனைவராலும் பாராட்டப் பெற்றவரும், இசைத்துறை, நாடகத்துறைகளில் புகழ் பெற்றவருமாகிய கே. பி. சுந்தராம்பாள் அவர்கள் 24—9—80 இல் சென்னையில், தமது 72ஆம் அகவையில் காலமானர்கள் என்ற செய்தியறிந்து ஆற்ருெணுத் துயரெய்துகின்ரோம்.

அம்மையார் எட்டாண்டுச் சிறுமியாக விருந்தபோதே நாடகத்தில் நடிக்கத் துவங்கினர். இவர் நடித்த முதல் நாடகம் "நல்லதங்காள்" என்பதாகும். அதனைத் தொடர்ந்து பல நாடகங்களில் நடிக்கலானர். இவர் தமது 18ஆவது அகவையில், அந் நாளில் புகழ் பெற்று விளங்கிய எஸ். ஜி. கிட்டப்பா என்னும் இசை வல்லுநருடன் நெருங்கிப் பழகி நாடகங்களில் நடித்து வந்தார். அதன் விளைவாக இவ் விருவருக்குமிடையே காதல் வளர இருவரும் திருமணம் செய்துகொண்டனர். இஃதொரு கலப்புத் திருமணமாகும்.

திரு. கிட்டப்பா காலமான பின், அம்மையார் நாடகத்தில் நடிக்க விரும்பாமல் துறவு வாழ்க்கையை மேற்கொண்டார். எனினும் பொதுநலமும் நாட்டு நலமும் கருதித் தமது இசை ஆற்றலை அரசியலுக்குப் பயன்படுத்தினர். காந்தியடிகள்மீதும் பேராயக் கட்சியிடமும் பற்றுக்கொண்டு அரசியல் மேடைகள் பலவற்றில் இசையரங்கு நடத்திவந்தார். எப்போதும் தூய வெண்ணிறக் கதராடையினையே அணிந்திருந்தார். முருகப் பெருமானிடம் நீங்காப் பற்றுடையவராகத் திகழ்ந்தார்.

பின்னர்க் காலப் போக்கில் பலரின் வேண்டுகோளுக் கிசைந்து பக்திப் படங்களில் நடிக்க முற்பட்டார். அவ் வகையில்

இவர் நடித்த முதற் படம் "நந்தனர்". நாற்பதாண்டுகட்கு முன்னர் நடித்த அப் படத்திற்கு இவர் பெற்ற ஊதியம் ஒரு நூருயிரம் ரூபா என்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

அடுத்து ஔவையார், திருவிளையாடல், கந்தன் கருணை, மணிமேகலை, காரைக்கால் அம்மையார், பூம்புகார், துணைவன், மகாகவி காளிதாசர் போன்ற பக்திப் படங்களிலும், இலக்கியப் படங்களிலும் நடித்துப் பெரும்புகழ் பெற்ருர்.

இவர் சிறந்த பின்னணிப் பாடகியாகவும் திகழ்ந்தார். இவரது கலையாற்றலுக்குப் பரிசாக 1970இல் பத்மஸ்ரீ என்னும் (தாமரைச்செல்வி) பட்டத்தினைப் பெற்ருர். தமிழக அரசு இவருக்குக் 'கலைமாமணி' பட்டம் வழங்கிச் சிறப்பித்ததோடு சட்ட மன்ற மேலவை உறுப்பினராகவும் அமர்த்திற்று.

அம்மையாரின் இசையாற்றல் தமிழினத்துக்கே ஒரு தனிச் சிறப்பைத் தேடித் தந்தது எனில் மிகையன்று. இங்ஙனம் இசை நாடக, திரைப்பட உலகில் புகழ் பரப்பி வந்த அம்மையாரின் மறைவு தமிழ்க் கலை உலகிற்கு ஒரு பேரிழப்பாகும். மறைந்த கொடுமுடிக் கோகிலத்தின் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேம்.

———

ஆசிரியருக்குக் கடிதம்:

## தமிழ்நாட்டு வரலாற்றை எழுதத்தக்கார் யார்?

க. தமிழ்நாட்டு வரலாற்றை எழுதுமாறு பாவலர் திரு. கண்ணதாசரைத் தமிழக முதல்வர் கோரியுள்ளமையறிந்தோம். திரு. கண்ணதாசர் பெரும் பாவலரேயாயினும் பல்லாண்டுக் காலமாக மறப்புண்டும் மறைப்புண்டும் கிடக்கும் தமிழ்நாட்டு வரலாற்றை எழுதுமளவுக்குத் திறமையும் பொறுமையுமற்றவராவார்.

"இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்"

என்னும் குறள்நெறிக் கேற்ப அப்பணியைப் பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையார், பேரா. தி. வி. சொக்கப்பனர், பேரா. தங்க வேலனர் போன்ற வரலாற்றுப் பேரறிஞரிடம் ஒப்படைக்குமாறு தமிழக முதல்வரை வேண்டிக் கொள்கின்றேம்.

உ. அப்பணியின் அருமை குறித்து அதிலிருந்து விலகிக் கொள்ளுமாறு பாவலர் திரு. கண்ணதாசரை அன்புடன் கேட்டுக்கொள்கின்றேம்.

கு. பூங்காவனம்
அமைப்பாளர். உ. த. கழகம்
கருநாடகமாநிலம்.



வள்ளல் செட்டிநாட்டரசர்
இராசா சர் அண்ணாமலை செட்டியார்
நூற்றாண்டு விழா (1881—1980)

குண்டூர் திரு. கே. எஸ். சுப்பையா பிள்ளை



தோற்றம் :
28—11—1923

மறைவு :
3—10—1980

ப. கூசா.

# இராசா சர் அண்ணாமலைச் செட்டியார் நூற்றாண்டு விழா

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தை நிறுவித் தமிழும், கலைக் கல்வியும் தழைக்க வித்தூன்றியவரும், தமிழிசை இயக்கத்தினைத் தோற்றுவித்து, இசையுலகில் ஒரு புரட்சியை உண்டுபண்ணியவரும் பல அறங்களைச் செய்தவருமான, காலஞ்சென்ற டாக்டர், ராசா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களின் நூற்றாண்டு விழா செப்டம்பர்த் திங்கள் 28, 29, 30ஆம் நாள்களில் சென்னையிலும், தமிழகத்தில் பல்வேறிடங்களிலும் சீருஞ் சிறப்புமாகக் கொண்டாடப் பெற்றது. சென்னையிலுள்ள ராணி சீதை மன்றத்தில் இவ் விழா நடைபெற்றது.

28—9—1980இல் நடைபெற்ற விழாவிற்குச் சென்னை உயர் நீதிமன்றத் தலைமை நடுவர் மாண்புறு மு. மு. இசுமாயில் அவர்கள் தலைமை தாங்கினர். நிதி அமைச்சர் மாண்புமிகு நாவலர் நெடுஞ் செழியன் வரலாற்று ஓவியக் கண்காட்சியைத் திறந்துவைத்துச் சொற்பொழிவாற்றினர். அன்று மாலை நடைபெற்ற கருத்தரங்கில் அறிஞர் பெருமக்கள் பலர் கருத்துரை வழங்கினர். டாக்டர் பத்மா சுப்பிரமணியத்தின் கம்பராமாயண நாட்டிய நாடகம் நடைபெற்றது.

29—9—1980இல் நடைபெற்ற விழாவிற்கு அறநிலையத் துறை அமைச்சர் மாண்புமிகு இராம வீரப்பன் அவர்கள் தலைமை தாங்கினர். விழாமலரை, சட்டமன்ற மேலவைத் தலைவர் முனைவர் ம. பொ. சிவஞானம் வெளியிட்டார். அதனைக் கவிஞர் கண்ணதாசன் பெற்றுக்கொண்டார். சீர்காழி கோவிந்தராசனின் இன்னிசை அரங்கு நடைபெற்றது.

30—9—1980 அன்று மாலை தமிழக ஆளுநர் பிரபுதாசு பட்வாரி அவர்கள் தலைமையில் நடைபெற்ற விழாவில் ராசா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களின் நினைவு அஞ்சல் தலை அஞ்சல்துறை அமைச்சர் திரு. ஸ்டீபன் அவர்களால் வெளியிடப் பெற்றது. அதனைத் தமிழக முதல்வர் மாண்புமிகு ம. கோ. இராமச் சந்திரன் அவர்கள் பெற்றுக்கொண்டார். இவ் விழாவினையொட்டி அண்ணாமலைச் செட்டியார் நினைவுப் பரிசுகளையும் முதல்வர் வெளியிட்டார்.

நடுவண் அரசு வேளாண்மைத் துணை அமைச்சர் திரு. ஆர். வி. சாமிநாதன், தமிழகப் பேராயக் கட்சித் தலைவர் கருப்பையா மூப்பனர், அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் வி. எஸ். சோமசுந்தரம் ஆகியோர் சிறப்புரை ஆற்றினர்.

இந்த விழாவினையொட்டி நடத்தப்பட்ட பேச்சுப் போட்டி எழுத்துப் போட்டிகட்காக ஏற்படுத்தப்பட்ட தொகை ரூபா 7000 ஆகும். இவ்விழா தமிழகத்தில் மட்டுமன்றி மலேசியா, சிங்கப்பூர், இலங்கை, பர்மா போன்ற அயல்நாடுகளிலும் நடைபெற்றது.

## வள்ளலார்—காந்தியடிகள் விழா

இராமலிங்கர் பணிமன்றத்தின் சார்பில் வள்ளலார்—காந்தியடிகள் விழா, 1—10—1980 முதல் 6—10—1980 முடிய, சென்னை ஏ.வி.எம். இராசேசுவரி திருமண மண்டபத்தில் சிறப்புற நடைபெற்றது.

முதல்நாள் தமிழகச் சட்டமன்ற மேலவைத் தலைவர் டாக்டர் ம. பொ. சிவஞானம் அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினார். மன்றத் தலைவர் திரு. நா. மகாலிங்கம் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார். மாண்புமிகு அமைச்சர் இராம. வீரப்பன் அவர்கள் தொடக்கவுரை நிகழ்த்தினார்.

2, 3—10—1980ஆம் நாள்களில் காந்தியடிகள் விழாவினை முன்னிட்டுக் கவியரங்கமும் கருத்தரங்கமும் நடைபெற்றன. கவிஞர் அரங்க சீனிவாசன் எழுதிய 'காந்தி காதை' என்னும் நூலினை 3—10—1980இல் நீதிபதி. எஸ். மகராசன் அவர்கள் வெளியிட்டார். திரு. நா. மகாலிங்கம் அவர்கள், கவிஞருக்குக் கதராடை போர்த்திச் சிறப்பித்தார்.

4—10—1980இல் திரு எஸ். டி. காசிராஜன், ஐ.ஏ.எசு. அவர்கள் தலைமையில் நீதிபதி ச. மோகன் அவர்கள் "வள்ளலாரின் சமூக சீர்திருத்தம்" என்பது பற்றிப் பேசினார். 5—10—1980 அன்று வள்ளலார் விழா திரு. ஊரன் அடிகள் தலைமையில் நடைபெற்றது. சுத்த சன்மார்க்க அன்பர்கள் பலர் சொற்பொழிவாற்றினர்.

6—10—1980 அன்று முத்தமிழ்க் காவலர் டாக்டர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் தலைமையில் சிலம்பொலி செல்லப்பன் 'சீவ காருண்யம்' பற்றி உரையாற்றினார். டாக்டர் ஔவை நடராசன்—வரவேற்புரை நிகழ்த்தினார். டாக்டர் வ. சுப. மாணிக்கம் தெ. பொ. மீ. அவர்களின் படத்தினைத் திறந்துவைத்தார். ஆறுநாட்களும் திரு. கிரிதாரி பிரசாத் அவர்களின் சொற்பொழிவுகள் நடைபெற்றன. அருட்பா இசை அரங்கும் நடைபெற்றது. நாள்தோறும் அறிஞர் பலர் உரையாற்றினர்.

———

### பரதனும் பிரிட்டனும்

'ஆய் அண்டிரன்' என்னும் தமிழ்ச் சொல் 'ஆந்திரன்' என்னும் சொல்லிலிருந்து வந்தது என்பது 'பரதன்' என்பதிலிருந்து 'பிரிட்டன்' என்பது பிறந்தது என்பது போன்றது.

—தமிழ்க்காப்புக் கழகப் பேருரையில் பாவாணர் அவர்கள் கூறியது : 1—21—'64.

—கலைமணி

## தமிழின் மாண்புபற்றித்
## தலைமை அமைச்சர் இந்திராகாந்தி கருத்துரை

''தமிழ்மொழியின் இனிமை, சிறப்பு ஆகியனபற்றி, இங்கே பேசியவர்கள் மேற்கோள்களுடன் குறிப்பிட்டார்கள். ஆனால், தமிழின் சிறப்பை முழுமையாக உணர்ந்து சுவைக்க என்னால் இயலவில்லை என்பதை நான் ஒப்புக்கொள்ளவேண்டும். தமிழைப் பற்றி நான் அதிகமாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். அந்த மொழியைக் கற்றுக் கொள்ளவேண்டும் என்னும் அவா எனக்கு நீண்ட நாட்களாகவே உண்டு. சில ஆண்டுகளுக்கு முன்னர் அதை நான் கற்கத்துவங்கினேன். அதில் ஓரளவு பேசவும், அதனைப் படிக்கவும் பயிற்சி பெற்றேன். ஆனால் முறையாகவும் முழுமையாகவும் அதனைக் கற்றுக்கொள்ள வாய்ப்பு நேரம் கிடைக்காமற் போனதுபற்றி இப்போது வருத்தப்படுகிறேன்.

''தமிழ் மிகத் தொன்மையான மொழி. அதன் இலக்கியவளம் அளவிட முடியாதது. இந்திய மொழிகளிலேயே அஃதொரு சிறந்த மொழியாகும். அஃது இந்தியமொழி மட்டுமன்று. இலங்கை, சிங்கப்பூர் போன்ற அயல்நாடுகளிலும் ஏராளமானவர்களால் பேசப்படுகின்றது. பாரதி தமிழ்நாட்டுப் புலவன் மட்டுமன்று. பாரதியின் பெயர் உலக மறிந்த ஒன்று. எனவே, தமிழ் ஓர் உலகமொழியும் ஆகும். தமிழ் பழம்பெருமை வாய்ந்தது மட்டுமன்று. தற்காலத்திலும் தமிழ் உயர்ந்த நிலையிலுள்ளது. இன்னும் அதன் சிறப்புக் குன்றாமலிருக்கிறது. புதிய கருத்துக்களையும் கண்டுபிடிப்புக்களையும் எளிதில் வெளியிடத் தமிழால் முடியும்.

''இலக்கியம் அறிந்த பலர் குழுமியுள்ள இந்த அவையில், தமிழைப்பற்றி ஓரளவே அறிந்த நான் அதைப்பற்றிப் பேசுவது பொருத்தமாகத் தெரியவில்லை. உரோமப் பேரரசின் மன்னர் மன்னன் ஒருவர் தமது அவையிலிருந்த ஒருவரைப் பார்த்து. உலகிலேயே சிறந்தது எது?'' என்று கேட்டார். அதற்கு அவர் 'மொழி' என்று மறுமொழி கூறினார். அடுத்து 'உலகிலேயே மிகக் கேடானது எது?' என்று கேட்க, அதற்கும் அவர் 'மொழி' என்றுதான் மறுமொழி தந்தாராம்.

''ஆகவே, மொழியைப் பயன்படுத்தும் வகையில்தான் இருக்கிறது அதன் சிறப்பு அல்லது சீர்கேடு, என்பதை நாம் உணரவேண்டும். மனிதனை உயர்த்தவும், நாடுகளை வளமுறச் செய்யவும், உலகைச் சீர் பெறச் செய்யவும் பயன்படுகிற அதே மொழிதான் அழிவுக்கும் குற்றங் களுக்கும் வன்முறைக்குங்கூட ஒரு சிலரால் பயன்படுத்தப்படுகிறது என்பதை நாம் காணமுடிகிறது.''

''என்று 30—9—80 அன்று, கிண்டி இராசபவனத்தில் நடைபெற்ற அனைத்திந்திய தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் மூன்றாவது மாநாட்டில் சிறப்புரையாற்றிய இந்தியாவின் தலைமை அமைச்சர் திருமதி இந்திரா காந்தி அவர்கள் குறிப்பிட்டார்கள்.

———

# செய்திகளும் குறிப்புக்களும்

## பேரறிஞர் அண்ணா நினைவு இல்லம் திறப்புவிழா

16—8—80 அன்று மாலை காஞ்சிபுரத்தில் பேரறிஞர் அண்ணா நினைவுஇல்லத் திறப்புவிழா மேதகு இந்தியக் குடியரசுத்தலைவர் என். சஞ்சீவரெட்டி அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. தமிழ்நாடு முதலமைச்சர் மாண்புமிகு ம. கோ. இராமச்சந்திரன் அவர்கள் தலைமை தாங்கினர். தமிழ்நாடு ஆளுநர் மேதகு பிரபுதாசு பட்வாரி அவர்கள் பேரறிஞர் அண்ணா அவர்களின் திருவுருவச்சிலையினை யும் நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் பொருட்காட்சியினையும் திறந்து வைத்துச் சொற்பொழிவாற்றினர். டாக்டர் ம. பொ. சிவஞானம், டாக்டர் முத்தமிழ்க்காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம், திரு. ப. உ. சண்முகம், மற்றும் பெருமக்கள் பலர் சிறப் புரை ஆற்றினர்.

## தமிழ்த்தென்றல் 'திரு. வி. க.' விருதுவழங்கும் விழா

பேரறிஞர் அண்ணா நினைவுஇல்லத் திறப்பு விழாவையொட்டி 16—10—80இல் தமிழ்த்தென்றல் திரு. வி. க. விருது வழங்கும் விழாவும் நடைபெற்றது. அவ் விழாவில் புகழ்பெற்ற பழம்பெரும் எழுத்தாளர் திரு. நாரண துரைக்கண்ணன் (ஜீவா) அவர்களின் இலக்கியப் பணியைப் பாராட்டித் தமிழக முதல்வர் ம. கோ. இராமச் சந்திரன் அவர்கள் தமிழ்த்தென்றல் திரு. வி. க. விருதினை வழங்கிச் சிறப்பித்தார். பத்தாயிரம் வெண்பொற்காசுகளும் நிதியாக வழங்கப் பட்டன. அறிஞர் பலர் பாராட்டுரை வழங்கினர்.

## தமிழர் உரிமைக் கழகத் தொடக்கவிழா

தமிழ்ப் பெருங்குடி மக்களின் உரிமையைக் காக்கும் நோக்கத்துடன் நிறுவப்பட்டுள்ள இக் கழகத்தின் தொடக்கவிழாவும், அறிஞர்கள் பிறந்தநாள் விழாவும் 22—9—80 அன்று மாலை உரத்தநாடு மையப்பள்ளியில் திரு சாமிதவிடன் அறி. இ. அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. திரு. இரா. பண்டாரிநாதன் க. மு. வரவேற்புரை நிகழ்த்தினர். தமிழகச் சட்டமன்ற மேலவைத் துணைத் தலைவர் மாண்புமிகு புலவர் புலமைப்பித்தன், பேராசிரியர் ந. இராம நாதன், க. மு., புலவர் த. ச. தமிழ்வேலனர், புலவர் தொல்காப்பியன், சி. அரசிறைவன், அறி. இ. ஆகியோர் முறையே 'பாவேந்தரும் விடுதலையும்' 'பெரியாரும் விடுதலையும்', 'மறைமலையடிகளும் விடுதலை யும்' 'அண்ணாவும் விடுதலையும்' 'பாவாணரும் தனித்தமிழும்' என்னுந் தலைப்புகளில் சிறப்புரையாற்றினர். திரு. ந. வை. இளஞ்செழியன் நன்றி நவில விழா இனிது முடிந்தது.

## அரியலூர் மணிவாசக மன்றவிழா

தவத்திரு மறைஞான சம்பந்த சிவாச்சாரிய அடிகள் முத்தித் திருநாளை முன்னிட்டு 10—9—80 அன்று அரியலூர் சிவன் கோயிலில்

வழிபாடு நடைபெற்றது. புலவர் சா. சிவப்பிரகாசம் பிள்ளையவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர். தலைவர் முதுபெரும் புலவர் திரு. மா. குப்புசாமி அவர்கள் தலைமையுரை ஆற்றினர். அரியலூர் அரசு மேல்நிலைப்பள்ளித் தலைமை ஆசிரியர் திரு. சீனிவாச முதலியார் அவர்கள் திருவாவடுதுறை ஆதீனத்தின் சிறப்புகளைப் பற்றிப் பேசினர். திருவாவடுதுறை குருமகா சன்னிதானம் தவத்திரு அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள் அருட்டிரு சுப்பிரமணியத் தம்பிரான் அவர்களை இளவரசாக அமர்த்தியிருப்பதை வரவேற்று இம் மன்றம் தீர்மானம் ஒன்றை நிறைவேற்றியது. பின்னர், புலவர் திருமதி காமாட்சி நடராசன் அவர்கள் மறைஞான சம்பந்தர் அருள் வரலாறு என்ற பொருள்பற்றிப் பேசினர். நல்லாசிரியர் சுவை மருதுவாணர் எம். ஏ., பி. இடி. நன்றி நவில விழா இனிது முடிந்தது.

## கவிஞர் வேதநாயகனர் 151ஆம்ஆண்டு நிறைவுவிழா

மாயூரம் வட்டநடுவர் (முன்சீப்) கவிஞர் வேதநாயகனர் 151 ஆவது ஆண்டு நிறைவுவிழா 29—8—80இல் மாயூரம் நகராட்சி மேல்நிலைப்பள்ளிக் கலையரங்கில் தமிழக அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு இராம வீரப்பன் அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. இவ் விழாவினை முன்னிட்டு 50 ஆவது நாடக அரங்கேற்றம் நடைபெற்றது. தொழிலதிபர் வி. ஜி. சந்தோஷம் அவர்கள் நாடக மலரினை வழங்கிச் சொற்பொழிவாற்றினர். விஜயா தியேட்டர் அதிபர் குருநாதன் செட்டியார் முதல்மலரினைப் பெற்றுக்கொண்டார். முத்தமிழ்க் காவலர் டாக்டர். கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் சிறப்புரை ஆற்றினர்.

## காமராசர் நினைவாலய அடிக்கல் நாட்டுவிழா

சென்னைத் தேனம்பேட்டை காமராசர் திடலில் எழுப்பப்பட விருக்கும் காமராசர் நினைவு மண்டபத்தின் அடிக்கல் நாட்டுவிழா 30—9—80 அன்று நடைபெற்றது. இவ் விழாவிற்கு முன்னுள் தமிழக முதல்வர் திரு. பக்தவச்சலம் தலைமை தாங்கினர். இந்தியத் தலைமை அமைச்சர் திருமதி இந்திராகாந்தி நினைவுமண்டபத்திற்கு அடிக்கல் நாட்டினர். திரு. பா. இராமச்சந்திரன், எஸ். வி. இலட்சுமணன், சிவாசிகணேசன், திரு. கருப்பையா மூப்பனர் மற்றும் தலைவர்கள் பலர் உரையாற்றினர்.

## வடசென்னையில் திருப்புகழ் ஞானவேள்வி

வள்ளிமலை தவப்பீடம் நிதிக்காகத் திருப்புகழ் சமாசம் பலவிடங்களில் திருப்புகழ் ஓதும் வேள்வியினை நடத்திவருகின்றது, அவ்வகையில் வண்ணை தெய்வப்பணி மகளிர்மன்றம் அண்மையில் அவ் வேள்விக்கு ஏற்பாடு செய்திருந்தது. 7—9—80 அன்று திருமதி டாக்டர் மா. செல்வசங்கரி, கிருட்டிணவேணி கோவிந்தசாமி, சங்கரி அருணசலம் ஆகியோர் திருவிளக்கேற்றி வைத்து வேள்வியைத் துவக்கினர். திரு முருகவிசாக நம்பி, சண்முகம், சங்கர நாராயணன், ஈசுவர் ஆகியோர் வேள்வியை நடத்தினர். கலைமாமணி கருப்பையா தலைமையில் நல்லா

சிரியர் கந்தசாமி முன்னிலையில் தவத்திரு மயிலை முனிவர் சுந்தரராம சாமிகள் தொடக்கவுரை நிகழ்த்தினர். பண்டிதர். வி. நடேசன் வாழ்த்துரை வழங்கினர். மாலையில் திருவிளக்கு வழிபாடு நடந்தது. அதனைச் சியாமளா அம்பிராசன், அமராவதி, கோவிந்தம்மாள் ஆகியோர் தொடங்கி வைத்தனர். முருக அன்பர்கள் பலர் பேசினர். அனைவர்க்கும் மாலைக்குப் பதில் திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ் அன்பளிப்பாக வழங்கப்பட்டது.

## இலக்கிய ஒப்பாய்வுக் கழகச் சொற்பொழிவுகள்

இலக்கிய ஒப்பாய்வுக் கழக முதலாண்டு விழாவும் டாக்டர் எஸ். இராமகிருட்டிணன் அவர்களின் ஏழு சிறப்புச்சொற்பொழிவுகளும் சென்னை, மயிலை சினிவாச சாத்திரி மண்டபத்தில் செப்டம்பர் 15ஆம் நாள் முதல் 21ஆம்நாள் முடிய நடைபெற்றன. இச் சொற்பொழிவுகட்கு முறையே தலைமை நடுவர் மு. மு. இசுமாயில், பேராசிரியர் ஏ. என். பரசுராமன், ஆளுநர்பிரபுதாஸ் பட்வாரி, வி. இராமமூர்த்தி ஐ. ஏ எசு., எஸ். நல்லபெருமாள், டாக்டர் ந. சஞ்சீவி, கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் ஆகியோர் தலைமை தாங்கினர். மற்றும் ஜெயகாந்தன், ஔவை, நடராசன், குமரிஅனந்தன், அகிலன், கவிஞர் புலமைப்பித்தன் டாக்டர் மெ. சுந்தரம் ஆகியோரும் பேசினர்.

## குண்டூர் திரு. கே. எஸ். சுப்பையாபிள்ளை மறைவு

திரு. தி சு. விசுவநாதபிள்ளை அவர்களின் பெயரரும் புகழ்பெற்ற புகையிலை ஏற்றுமதி வணிகருமான குண்டூர் கே. எஸ். சுப்பையாபிள்ளையவர்கள் 3 – 10—1980 இல், சென்னையில், தமது 57ஆவது அகவையில் இறையடி சேர்ந்தார்கள் என்ற செய்தியறிந்து பெரிதும் வருந்துகிறோம். திரு. பிள்ளை அவர்களின் தந்தையார், கே. எஸ். சங்கரன் பிள்ளை வேளாண்மையில் ஆழ்ந்த கல்வியும் பயிற்சியும் பட்டறிவும் பெற்று குண்டூரில் புகையிலை பயிரிடுதலில் சிறந்து விளங்கினர். ஐரோப்பிய வல்லுநர்கள் முயன்றும் விளைவிக்கமுடியாத சிறந்த புகையிலை வகையினை உலகோர் பாராட்டும் வண்ணம் விளைவித்துக் காட்டிய பெருமை இவருக்கு உண்டு. திரு. சுப்பையா பிள்ளையவர்கள் எம்.ஏ., பட்டம் பெற்றவர். கிரிக்கெட் பந்தாட்டத்தில் ஆர்வமுள்ளவர். பட்டப்படிப்பை முடித்தபின் இவர் குண்டூர் சென்று புகையிலை வணிகம் செய்து வணிகத்துறையில் சிறந்து விளங்கினர். ஆந்திர கிரிக்கெட் குழுவின் தலைவராகவும் இந்திய கிரிக்கெட் குழுவின் உறுப்பினராகவுமிருந்தார். பல பொதுப் பணிகளில் ஈடுபாடு கொண்டிருந்தார். சைவ வேளாளர் பேரவையில் தலைவராகவும் இருந்தார். சென்னை செங்கல்பட்டு முன்னேறிய சமூகத்தினர் நலனுக்காகப் பாடுபட்டார். தியாகராய நகர், 'குண்டூர் சுப்பையாபிள்ளை பெண்கள் உயர்நிலைப் பள்ளி'யினை நிறுவிக் கல்விப்பணி ஆற்றிவந்தார். இத்தகைய நல்லாரின் பிரிவு சைவ வேளாளர் மரபினருக்குப் பேரிழப்பாகும். மறைந்த பிள்ளை அவர்களின் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு, ருடு-சஅ ஆம் பக்கத் தொடர்ச்சி)

உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் ரூ. 10—00
,, ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் 5—00
,, A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை 5—00
,, க. ப. அறவாணன் & தாயம்மாள் (3—9—1980 இல் பெண்குழந்தை பிறந்ததன் நினைவாக நூலக வளர்ச்சி நன்கொடை) 21—00

———

# மதிப்புரை

## செங்கோர்

[ஆசிரியர்: டாக்டர் க. ப. அறவாணன், பாரி நிலையம், சென்னை-1 விலை: ரூ. 7—00.]

பல்லாயிரம் ஆண்டுகட்குமுன் ஆப்பிரிக்கா இந்தியாவுடன் இணைந்திருந்து, பின்னர்ப் பிரிந்திருக்கலாம் என்பது ஒருசார் ஆய்வாளர்களின் கருத்து. அவ்வாருயின் அவ்விரு நாடுகளில் வாழும் மக்களிடை ஏதாவது ஒற்றுமை காணப்படுகிறதா என்று ஆய்தல் வேண்டும். அந்த முயற்சியில் டாக்டர் க. ப. அறவாணன் கடந்த மூன்ருண்டுகளாக ஈடுபட்டுப் பல்வேறு உண்மைகளைக் கண்டுபிடித்துள்ளார். இந்த ஆய்வுக்கு வித்திட்ட பெருமகன் மேலை ஆப்பிரிக்கநாடான செனகலின் குடியரசுத் தலைவர் டாக்டர் செங்கோர் ஆவார். அவரைப்பற்றி நாம் தெளிவாகத் தெரிந்துகொள்ள வேண்டுமானல் அவருக்கிணையாகத் திகழ்ந்த நம் இந்தியப் பெருமகனர் டாக்டர் எஸ். இராதாகிருட்டிணனை எண்ணினல் போதும். செங்கோர் எளிய குடும்பத்தில் பிறந்து உயர்ந்த பதவியைப் பிடித்தவர்; சிறந்த கல்வியாளர்; ஆசிரியராகப் பணியாற்றியவர்; நாட்டு விடுதலைக்காகப் போராடிச் சிறை சென்றவர்; நல்ல கவிஞர்; நாடக ஆசிரியர்; பெருந்தத்துவ அறிஞர்; உலகம் போற்றும் உத்தமர்; காந்தியடிகளைத் தம் குருவாக ஏற்றுக்கொண்டவர்.

அவர்தம் நூல்கள் உலகின் பல்வேறு மொழிகளில் மொழி பெயர்க்கப்பெற்றுள்ளன. கடந்த 20 ஆண்டுகளாகத் தொடர்ந்து நேரடித் தேர்தல் மூலம் குடியரசுத் தலைவராகத் திகழ்ந்து வருபவர்.

இத்தகைய பேரறிஞர்க்குத் தமிழில் பேரீடுபாடு உண்டு. திராவிட இனம் தம் இனத்துடன் இணையானது என்று கருதுபவர். அதற்காக விரிவான ஆய்வைப் பல்கலைக்கழக அளவில் நடத்துபவர். இப் பெருந்தகையாளரின் வரலாற்றை ஆசிரியர் திரு. க. ப. அறவாணன் சுவைபடத் தீட்டியுள்ளார். திரு. செங்கோர் தம் நாட்டில் உலகத்தமிழ் மாநாடு நடத்த வேண்டுமென்று அழைப்பு விடுத்த பெருமகனர். அவர் தம் வாழ்க்கை வரலாறு 5 ஆம் உலகத்தமிழ் மாநாடு நடைபெறவிருக்கும் இவ் வேளையில் வெளிவந்துள்ளது பொருத்தமானது.

## Anthropological Studies on the Dravido—Africans

[Dr. K. P. Aravanan, Paari Nilayam, Madras-1, Price Rs. 20—00.]

திராவிட இனமும் ஆப்பிரிக்க இனமும் ஒரு காலத்தில் இணைந்து வாழ்ந்தவை என்ற எண்ணத்துடன் அதை உறுதிப்படுத்தப் பல்வகை ஆய்வுகளை டாக்டர் க. ப. அறவாணன் மேற்கு ஆப்பிரிக்க நாடான செனகலில் உள்ள பல்கலைக் கழகத்தில் பணியாற்றிக்கொண்டு நிகழ்த்தி வருகிறார். தம் ஆய்வின்வழிக் கண்டறிந்த உண்மைகளை உலகுக்கு எடுத்துக்கூறும் வகையில் ஆங்கிலத்தில் இவ் ஆய்வுக் கட்டுரைகளைப் படைத்துள்ளார். இரு நாடுகளிலும் முருகு வழிபாடு, தாய்த்தெய்வ வழிபாடு, கிருட்டிண வழிபாடு, பாம்பு வணக்கம் போன்ற வழிபாட்டு முறைகள் எவ்வாறு பொருத்தமாக நடைபெறுகின்றன என்பதைப் பல் வேறு சான்றுகள் காட்டி நிறுவியுள்ளார். இத்தகைய வழிபாடுகள் மட்டுமின்றிப் பழக்க வழக்கங்களிலும் ஒற்றுமை உள்ளன என்பதைப் பிற்பகுதியிலுள்ள ஆய்வுக் கட்டுரைகளில் தெளிவுபடுத்தியுள்ளார். இரு நாட்டு மக்களிடமுள்ள திருமண முறைகள், பல்லாங்குழி ஆடும் பழக்கம் போன்றவற்றில் உள்ள ஒற்றுமைகள் வியப்பைத் தருகின்றன. கடல்கோளைப் பற்றித் தமிழ் இலக்கியத்தில் உள்ளதுபோல ஆப்பிரிக்க மக்களிடையேயும் பல பழங்கதைகள் வழங்குகின்றன என்பதை ஆசிரியர் சுட்டிக்காட்டி முன்னொரு காலத்தில் இருநாடுகளும் இணைந்திருந்தமைக்குப் பல சான்றுகள் இருப்பதைத் தெளிவுபடுத்தியுள்ளார். மக்கள் குமரிக்கண்டத்தில்தான் முதன்முதல் தோன்றிப் பின்னர் உலகின் பல்வேறு பகுதிகளுக்குக் குடியேறினர் என்ற உண்மையை இத்தகைய ஆய்வுகள் நிலைநாட்டுகின்றன. இத்தகைய அரிய ஆய்வில் ஈடுபட்டு உண்மையை நிலைநாட்ட ஆப்பிரிக்கா முதல் அந்தமான்வரை பல்நாடுகளுக்கும் சென்று அல்லற்பட்டு அரிய உண்மைகளைத் தேடித்தரும் நூலாசிரியர் பாராட்டுக்குரியவர்.

## தமிழ் வட்டெழுத்து

[ஆசிரியர்: இரா. கிருட்டிணமூர்த்தி, எம்.ஏ., 161, அண்ணாசாலை, சென்னை-2. விலை ரூ. 5—00]

அண்மைக் காலத்தில் தமிழ் எழுத்து வரிவடிவத்தின் தோற்றத்தைப் பற்றிப் புதுப்புது உண்மைகள் கண்டுபிடிக்கப்பெற்றுள்ளன. அத்துடன் வரிவடிவ வளர்ச்சியைப் பற்றி ஒருசில நல்ல வழிகாட்டி நூல்கள் வெளிவந்துள்ளன. அவ்வகையில் தமிழ் வட்டெழுத்தின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் ஆயும் இந்நூல் பயனுடையது. வட்டெழுத்தில் ஒவ்வோர் எழுத்தின் வடிவத்தையும் நன்கு ஆய்ந்து தெளிவாக விளக்கியுள்ளார். இந்நூலை முறையாக நன்கு கற்றால் வட்டெழுத்தில் உள்ள கல்வெட்டுக்கள், செப்பேடுகள் அனைத்தையும் படிப்பது எளிதாக முடியும். கல்வெட்டு ஆய்வாளர்கட்கும் வரலாற்றாசிரியர்கட்கும் பெரிதும் பயன்படக்கூடிய சிறிய அரிய நூலை ஆக்கிய ஆசிரியர் பாராட்டுக்குரியவர்.

---

தென்னிந்தியத் தமிழ்ச் சங்கத்திற்காக
சென்னை, 80, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப்.

## கழக நிலையங்களில் கிடைக்கும்

# பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| பழந்தமிழர் வீரப் பண்பாடு — கதிர் மகாதேவன் | 30 | 00 |
| இலக்கிய மலர்கள் — மு. மு. இசுமாயீல் | 25 | 00 |
| இலக்கியத் திறனாய்வியல் — தா. ஏ ஞானமூர்த்தி | 30 | 00 |
| தாகூரின் தத்துவக் கதைகள் — தமிழாக்கம் : மகாகவி பாரதியார் | 9 | 50 |
| ஓர் இலக்கியவாதியின் கலையுலக அனுபவங்கள் — ஜெயகாந்தன் | 15 | 00 |
| தமிழில் நாட்டுப்புறப் பாடல்கள் — டாக்டர் சு. சண்முகசுந்தரம் | 13 | 50 |
| காலத்தைப் பயன் படுத்துவது எப்படி? — பி. சி. கணேசன் | 4 | 00 |
| இருண்டவானில் ஒரு மின்னல் காற்று — மாரி அறவாழி | 16 | 50 |
| வழிகாட்டிய பெருமக்கள் — தி. தண்டபாணி | 9 | 00 |
| தாழ்வு மனப்பான்மையைப் போக்குவது எப்படி? — பி. சி. கணேசன் | 4 | 00 |
| கண் இமையில் மறைந்த கனவுகள் — லேனா தமிழ்வாணன், எம்.ஏ. | 3 | 25 |
| பயன்தரும் மனோதத்துவம் — சீனிவாசன் ராமலிங்கம் | 7 | 50 |
| காசளவில் ஓர் உலகம் — சுஜாதா இராமையா | 25 | 00 |
| கடவுள் வரலாறு அருளியல் பொருளின் அறிவியல் விளக்கம் — அருட்கவி கவிக்கடல் | 6 | 00 |
| சிலம்பின் தனித்தன்மை — ஆர். எஸ். மார்க்கபந்து சர்மா, எம்.ஏ. | 14 | 00 |
| கம்பன் சுவை — கவிஞர் செவ்வேள் | 6 | 00 |
| கம்பர் காட்சி — ஔவை நடராசன் | 13 | 00 |
| வைகுந்தம் திறந்தது — ம. பொ. சி. தொகுப்பு: மா. ரா. இளங்கோவன் | 5 | 00 |
| Path way to God through the Tiruvachakam | 15 | 00 |

## கழகம் வெளியிட்டுள்ள

## அரசியல் பெருமக்கள் வரலாறுகள்.

| | | |
|---|---|---|
| காந்தி அடிகள் | 2 | 50 |
| முதற் குடியரசுத் தலைவர் | 2 | 00 |
| லால்பகதூர் | 2 | 00 |
| கோபால கிருஷ்ண கோகலே | 2 | 00 |
| அமெரிக்கக் காந்தி | 5 | 00 |
| அரசியல் தலைவர்கள் I | 2 | 25 |
| ,, II | 2 | 50 |
| உலகப் பெருமக்கள் I | 2 | 00 |
| ,, II | 2 | 00 |
| ஆல்பர்ட் சுவைட்சர் | 2 | 50 |
| நாடுகண்ட பெருமக்கள் | 5 | 00 |
| உரிமையின் பரிசு (தொகுப்பு நூல்) காந்தியடிகள் | 10 | 00 |
| உலகப் பேரொளி (சவகர்லால் நேரு) | 10 | 00 |

## NEW BOOKS

| | | |
|---|---|---|
| Abithana Chinthamani (அபிதான சிந்தாமணி) A. Singaravelu Mudaliar. Rs. | 200 | 00 |
| Mathura A District Memoir | 175 | 00 |
| Progressive Grammar of the Malayalam Language | 95 | 00 |
| Dictionary : Kannada and English | 135 | 00 |
| A Hand book of the Tamil Language | 95 | 00 |
| Winslow's A Comprehensive Tamil and English Dictionary | 200 | 00 |
| Winslow's English-Tamil Dictionary | 200 | 00 |
| English-Telugu Dictionary By Brown C.P. | 165 | 00 |
| Telugu-English Dictionary ,, | 150 | 00 |
| A Grammar of the Telugu language ,, | 95 | 00 |
| An Elementary Grammar of the Kannada Language | 56 | 00 |
| Early History of The Dekkan | 60 | 00 |
| A Text of Indian History | 135 | 00 |
| Sacred Kural of Tiruvalluva nayanar -Rev. G.U. Pope | 95 | 00 |
| The Story of stupa | 145 | 00 |

**ASIAN EDUCATIONAL SERVICES,**
**New Delhi - 110 016,**

Books also available at:

The South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly, Ltd.,
79, Prakasam Saalai (Broadway).
Madras-600 001.

TIRUNELVELI-6 MADURAI-1 COIMBATORE-1
KUMBAKONAM-1 TIURCHIRAPALLI-2.

அப்பர் அச்சகம் சென்னை-1.